# கல்கி



KALKI மே 6, 1956 4 அணா

# எவ்வளவு தூய்மையானது பாருங்கள்!




பியர்ஸ் சோப்புக் கட்டியை வெளிச்சத்துக்கு எதிரே பிடித்துப் பாருங்கள்— நேரடியாக அதன் மூலம் உங்களால் ஊடுருவி நோக்க முடியும்! ஆம், பியர்ஸ் தூய்மை என்றால் அதுதான்! பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் பரிபூரணமான பாதுகாப்புத் தரும் அளவுக்கு பியர்ஸ் அவ்வளவு தூய்மையும் மென்மையும் கொண்டது!

# எவ்வளவு நல்லதென்று உணருங்கள்!



பியர்ஸ் சோப் உங்கள் சருமத்துக்கு நல்லது. அசல், க்ளிஸரின் அடங்கிய இந்த அழகு தரும் சோப் சருமத்தைப் பல்லாண்டுகள் மிருதுவான எழிலுடன் வைத்திருக்கிறது. பியர்ஸ் சோப்பைத் தவறாமல் உபயோகிக்கத் தொடங்குங்கள்.




# பியர்ஸ் சோப்

அசல், க்ளிஸரின் அடங்கிய, அழகு தரும் சோப்

லண்டனிலுள்ள ஏ & எப். பியர்ஸ் லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது. TG. 65-50 TM

மலர் 15
இதழ் 40

# கல்கி

## பொருளடக்கம்

மே. 6. 1956

துன்முகி ௵
சித்திரை 24



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

அப்பா
விஷயம் தெரிந்தவர்

அவர் அப்பா விஷயம் தெரிந்தவர்.
அவர் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ்
பேபி பவுடர் வாங்கி வருகிறார்.
என்ன குளுமை! என்ன மென்மை!
அந்தக் குழந்தையின் சருமத்திற்கு
எவ்வளவு இனிமையானது!

Johnson's

ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்




இலவசம்
குழந்தை பராமரிப்பு புத்தகத்தின்
இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்
றோர்களுக்கு வேண்டிய அநேக
விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன!
சுலபமாகப் படித்து புரிந்து கொள்
ளும்படியான இங்கிலீஷ் பாஷையில்,
எழுதப்பட்டுள்ளது.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி.ஓ. பாக்ஸ் 1976, டிபார்ட்மெண்ட் 80C,
பம்பாய்



மலர் 15 | இதழ் 40

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி ௵ சித்திரை மீ 24

# சமாதான யாத்திரை

ருஷ்யப் பிரதமர் புல்கானினும், ருஷ்யப் பொதுவுடைமைக் கட்சிக் காரிய தரிசி குருஷ்சேவும் பத்து நாட்கள் வரையில் பிரிட்டனில் யாத்திரை செய்து விட்டுச் சென்ற வாரம் தங்கள் நாட்டுக்குத் திரும்பிச் சென்றார்கள்.

சர்வதேச அரசியலில், ருஷ்யத் தலைவர்கள் பிரிட்டனுக்கு விஜயம் செய்யும் படியான சூழ்நிலை ஏற்படக்கூடும் என்று ஒன்றிரண்டு வருஷங்களுக்கு முன் யாருமே நினைத்திருக்க மாட்டார்கள்.

அப்போது வல்லரசுகளின் பிணக்கு உச்சநிலையில் இருந்தது: அதன் விளைவாகச் சர்வதேச நெருக்கடி வளர்ந்து கொண்டே வந்தது.

ஆனால், ஸ்டாலின் மரணத்துக்குப் பிறகு ருஷ்யாவின் போக்கில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. உலக நாடுகளுடன் நல்லுறவு கொள்ளத் தாங்கள் தயாராக இருப்பதாய் ருஷ்யத் தலைவர்கள் அடிக்கடி பிரகடனம் செய்து வந்தார்கள்.

ருஷ்யத் தலைவர்கள் சில மாதங்களுக்கு முன் இந்தியாவுக்கு விஜயம் செய்ததும், அவர்களுக்குப் பாரத மக்கள் ஏகோபித்த வரவேற்பு அளித்ததும் உலக நாடுகளைப் பிரமிக்க வைத்தன; ருஷ்யாவிடம் ஓரளவு நம்பிக்கை உண்டாகும்படியும் செய்தன.

ஆனால், அமெரிக்கா போன்ற வல்லரசுகளுக்கு ருஷ்யாவிடம் இன்னும் பூரண நம்பிக்கை ஏற்படவில்லை. எனினும், சர்வதேசப் பிரச்னைகள் தீர்ந்து உலகிலே அமைதி நிலவ வேண்டுமாயின், முக்கியமாக அமெரிக்கா, பிரிட்டன், ருஷ்யா இந்த மூன்று வல்லரசுகளிடையே பகைமை மறைந்து நட்பு ஏற்பட வேண்டும் என்ற அபிப்பிராயம் உலக மக்களிடையே பலமடைந்து வருகிறது என்பதில் சந்தேகமில்லை.

அதனால்தான், உலக மக்கள் ருஷ்யத் தலைவர்களின் யாத்திரையை மிகுந்த ஆர்வத்துடன் கவனித்து வந்தார்கள்.

ருஷ்யத் தலைவர்களின் விஜயம் காரணமாகப் பிரிக்கப்பட்ட ஜெர்மனியின் எதிர் காலம் பற்றியும் இன்னும் பல உலகப் பிரச்னைகளைக் குறித்தும் ருஷ்யாவுக்கும் பிரிட்டனுக்கும் இருந்து வந்த கருத்து வேற்றுமை அடியோடு மறைந்து பூரண நட்பு ஏற்பட்டு விடவில்லையெனினும், அதற்குப் பூர்வாங்கமான சூழ்நிலை உண்டாகி யிருக்கிறது என்பதில் மாத்திரம் ஐயமில்லை.

உதாரணமாக, பிரிட்டன் தடைகள் எதுவும் விதிக்காமலிருந்தால் அடுத்த ஐந்து ஆண்டுகளில் ருஷ்யா பிரிட்டனிடமிருந்து நூறு கோடி பவுனுக்குப் பண்டங்கள் வாங்க இசைந்திருக்கிறது.

தற்போது கொந்தளிப்பான நிலையிலிருந்து வரும் மத்திய கிழக்குப் பிரதேசங்களில் சமாதானத்தைப் பாதுகாக்கத் தங்களால் இயன்றதைச் செய்வதாக இரு நாடுகளும் உறுதி கூறி யிருக்கின்றன. அவ் விஷயத்தில் ஐக்கிய நாடுகள் சபைக்கு ஆதரவளிப்பதாகவும் கூட்டு அறிக்கையில் பிரகடனம் செய்திருக்கின்றன.

ஆயுத உற்பத்திப் போட்டியைத் தடுப்பதற்குற்ற சர்வதேச ஒப்பந்தம் ஏற்பட வேண்டியது அவசியம் என்ற விஷயத்திலும் ருஷ்யாவும் பிரிட்டனும் தங்கள் கருத்து ஒற்றுமையைத் தெளிவாகத் தெரிவித்திருக்கின்றன.

அணுகுண்டு யுத்த பயத்திலிருந்து மானிட வர்க்கத்தைக் காப்பாற்ற வேண்டிய அவசியத்தையும் இரு நாடுகளும் உணர்ந்திருக்கின்றன.

இங்கிலாந்திலிருந்து புறப்படுவதற்கு முன் ருஷ்யப் பிரதமர் புல்கானின் அறிவித்த ஒரு விஷயம் இதெல்லாவற்றையும் காட்டிலும் முக்கியமானது.

"ஈடனை ருஷ்யாவுக்கு விஜயம் செய்யுமாறு நான் அழைத்திருக்கிறேன். என்னுடைய அழைப்பை அவர் ஏற்றுக் கொண்டிருக்கிறார். இந்த விஜயம் பிரிட்டன் – ருஷ்யாவின் நட்பு மேலும் பலமடைவதற்கும், சர்வதேச நெருக்கடி

தீருவதற்கும் உதவியாக இருக்கும்" என்று ஸ்ரீ புல்கானின் கூறியுள்ளார்.

அவரது அழைப்புக்கு இணங்க, பிரிட்டிஷ் பிரதமர் ஈடன் ருஷ்யாவுக்கு விஜயம் செய்வாராயின் அவ்விரு நாடுகளிடையே மேலும் நல்லுறவு பலப்படுவதுடன், பல சர்வதேசப் பிரச்னைகள் தீருவதற்கும் வழி பிறக்கலாம்.

** ** **

இவ்விதம் பல விதத்திலும் நன்மை பயக்கக் கூடிய ருஷ்யத் தலைவர்களின் விஜயம் அமெரிக்காவுக்கு மாத்திரம் திருப்தியைக் கொடுக்காதது வருந்தத் தக்கது.

சர்வதேச நெருக்கடி தீருவதற்குற்ற எவ் விஷயத்தையும் வரவேற்க வேண்டிய அமெரிக்கா, ருஷ்யத் தலைவர்களின் பிரிட்டிஷ் விஜயத்தைச் சந்தேகக் கண் கொண்டு பார்க்க முற்பட்டிருப்பதை என்னவென்று சொல்லுவது!

"ருஷ்யக் கரடியை பிரிட்டிஷ் சிங்கம் கடித்துக் காயப்படுத்தி விட்டது" என்று பிரபல அமெரிக்கப் பத்திரிகையான "நியூ யார்க் டைம்ஸ்" எழுதி யிருக்கிறது.

அப் பத்திரிகை அமெரிக்க மக்களின் உண்மையான அபிப்பிராயத்தைப் பிரதிபலிப்பதாயின், ருஷ்யா விஷயத்தில் அமெரிக்காவுக்குச் சிறிதும் மனமாற்றம் ஏற்படவில்லை; ருஷ்யாவின் உண்மையான மனமாற்றத்தை அமெரிக்கா உணரவில்லை என்றே கூற வேண்டும்.

அது எப்படியாயினும், ருஷ்யத் தலைவர்கள் பிரிட்டனுக்கு விஜயம் செய்து பல்வேறு பிரச்னைகளைப் பற்றியும் தங்கள் கருத்துக்களை ஒளிவு மறைவின்றி வெளியிட்டதன் மூலம், ருஷ்யாவின் நன் நோக்கத்தை உலக மக்கள் மேலும் உணரும்படி செய்திருக்கிறார்கள். உலகப் பிரச்னைகள் தீரத் தங்களால் இயன்றதைச் செய்யப் பின்தங்கப் போவதில்லை என்பதையும் உலகத்துக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

# பாங்கி விவகாரம்

பாரத தேச சமுதாயத்தைச் சோஷலிஸ பாணியில் மாற்றி அமைப்பதற்காக நமது மாபெரும் தலைவர்களும் சுதந்திர சர்க்காரும் அரும்பாடு பட்டு வருகின்றனர். அதற்கான வழி முறைகளை வகுத்து வருகிறார்கள். மற்றொரு வழியில் நமக்கே உரிய பாணியில் ஸ்ரீ விநோபாஜி இன்னொரு முறையை வகுத்துக் கொண்டு பூதான இயக்கத்தின் மூலம் புரட்சிகரமான சோஷலிஸத்தை ஏற்படுத்தி வருகிறார். நாட்டு நலனில் அக்கறை கொண்ட நேரு சர்க்கார் மகத்தான ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்து, உலகம் போற்றும் முறையில் தேசத்தின் சுபிட்சத்துக்கு வழிகோலி வருகின்றனர். தேசத்தைச் சுபிட்சப் பாதையில் அழைத்துச் செல்வதே சோஷலிஸ லட்சியத்தை அடையும் மார்க்கமல்லவா!

சில மாதங்களுக்கு முன்பாக இன்ஷூரன்ஸ் கம்பெனிகளைத் தேசிய சொத்தாக்கிச் சர்க்கார் நிர்வகிக்கத் தொடங்கிய போது தேசமெங்கும் ஒரு பெரும் அதிர்ச்சி ஏற்பட்டது. தனியார் தொழில் துறையில் சர்க்கார் கைவைப்பதற்கு அங்குரார்ப்பணம் செய்து விட்டார்கள் என்ற வீண் பீதி பரவலாயிற்று. விரிவான அளவில் வர்த்தகம் செய்யும் தனித்தொழில் அதிபர்கள், 'சர்க்கார் நம் தலையிலும் கைவைப்பார்களோ!' என்று அஞ்சினார்கள்.

அடுத்தாற்போல் பாங்கிகளின் தலையிலும் கைவைக்கக் கூடும் என்று பலரும் தவறான அபிப்பிராயம் கொண்டார்கள்.

அந்த அபிப்பிராயம் முற்றிலும் தவறானது என்பதைச் சென்ற வாரம் டில்லி லோக சபையில் மத்திய சர்க்கார் ரெவின்யூ மந்திரி ஸ்ரீ ஏ. ஸி. குஹா தெளிவாக்கி விட்டார்.

"பாங்கிகள் நிர்வாகத்தைச் சர்க்கார் ஏற்காது. அதனால் அதிக லாபம் கிடையாது. இன்ஷூரன்ஸ் கம்பெனிகளின் பணத்தைப் போல் பாங்கிப் பணத்தைச் சர்க்கார் திட்டங்களுக்குப் பயன்படுத்த முடியாது.

"தவிரவும் எல்லாப் பெரும் தொழில்களையும் சர்க்கார் ஏற்று நடத்துவதென்பது முடியாத காரியம்" என்று ஸ்ரீ குஹா பேசியிருப்பது பாராட்டத் தக்கதாகும். அவரது பேச்சு வர்த்தகப் பிரமுகர்களிடையேயும், தொழில் அதிபர்களிடையேயும் இருந்து வந்த சந்தேகத்தைப் போக்கித் தைரியத்தை ஏற்படுத்தியிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அட்டைப்பட விளக்கம்

# ஸோஹினி

"எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா!" என்றார் மகாகவி பாரதியார்.

இது எவ்வளவு உண்மை என்பது சிந்தித்துப் பார்க்கும் போதுதான் தெரியவரும். தினம் மல்லி மலரைப் பார்க்கிறோம். அதைப் பற்றிச் சிந்திப்பதில்லை. ஆகா! இவ்வளவு சிறந்த மணத்தை இந்த மலருக்குள் எப்படி யார் கொண்டு வந்து வைத்தது என்று நினைத்துப் பார்த்தால் பேர் அதிசயமும் வியப்புமாக இருக்கும். உள்ளத்தில் இன்பம் பெருகும்.

அம் மாதிரியே நாம் சங்கீதக் கச்சேரியில் உட்கார்ந்து கொண்டு பாடகரின் பாட்டைக் கேட்கும் போது, சங்கராபரணம் என்றும், கல்யாணி என்றும் வஸந்தா என்றும் ராகங்களின் இனம் கண்டு பெரிதும் அனுபவிக்கிறோம். ஆனால் ஏதோ சில ஸ்வரங்கள் சேர்ந்து இப்படித் தனித்தனி ஒலியுருவம் பெற்று ராகங்களாகப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக நம்மிடையே நிலவி வருவதை நினைத்துப் பார்த்தால் எவ்வளவு அதிசயமாக இருக்கிறது.

ஸோஹினி என்னும் ராகம் கலைஞர் கனுதேசாயின் உள்ளத்தில் எத்தகைய அற்புதத்தை ஊட்டியது என்பதை அவர் எழிலோவியமாக வரைந்து காண்பித்திருக்கிறார். அதை இவ்விதம் அட்டைச் சித்திரமாக வழங்குகிறோம்.

# இளங்கோ விழா

பெரிய கலைஞன் ஒருவன் தங்கச் சிங்கம் ஒன்று மிக அழகாகச் செய்து உலகத்தைப் பிரமிக்க வைத்தான்.

காட்டு மிருகங்கள் ஒரு மகாநாடு கூட்டின. தங்கள் வனராஜனின் உருவத்தைச் செய்த கலைஞனின் திறமையைப் பாராட்டி ஒரு பிரேரபனை நரி கொண்டு வந்தது. இதை மற்ற விலங்குகள் ஏகமனதாக நிறைவேற்றின.

பூனைகளும் ஒரு மகாநாடு கூட்டித் தங்களுக்கு இவ்வளவு அழகிய பூனையைச் செய்து கொடுத்த கலைஞனுக்குத் தம்முடைய மகிழ்ச்சியைத் தீர்மான வடிவமாகச் செய்து அனுப்பின.

நாய்கள் எல்லாம் தம் மகாநாடு கூட்டின. கலைஞனைப் போற்றின. மிக அழகிய நாயைச் செய்து முடித்த கலைஞனுக்குத் தம்முடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டன.

பித்தளைப் பாத்திரங்கள் எல்லாம் கூடிக் கலையைப் பற்றி விவாதித்தன. இத்தகைய கலை வடிவத்தை அரிய பித்தளை உலோகத்தில் மஞ்சள் நிறத்தில் செய்ததைப் போற்றின.

அவ்வாறே செப்புப் பாத்திரங்கள் ஒரு மகாநாடு கூட்டிப் பேசி, 'செம்பைப் போன்ற உலோகம் இல்லை' என்று கருதி, அதைக் கொண்டு இந்த அழகிய சொரூபத்தைச் செய்த கலைஞனின் அறிவைப் போற்றின.

தங்கமும் ஒரு மகாநாட்டில் தலைமை வகித்து இந்த அழகிய பிம்பத்தைத் தலைசிறந்த உலோகத்தில் செய்த அருமையைப் போற்றிற்று. கலைஞனும், கலைஞன் கலையும், தங்கச் சிங்கமும் சேர்ந்து சிரித்து இவ்வாறு பல கருத்துக்களை எழுப்பினேமே என்று வியந்தன.

அதைப் போலவேதான் திருவள்ளுவர் சமணரே என்றும், சைவரே என்றும், வைஷ்ணவரே என்றும் ஆராய்ச்சி செய்வதும். இளங்கோவடிகள் சமணர் தாம் என்று சொல்கிற புலவர்களின் விவாதமும், கபீர் முஸ்லிமாக ஜனித்தவரா என்ற சரித்திர ஆராய்ச்சியும், துளசி தாஸர் அத்வைதியா அல்லது வைஷ்ணவ பக்தரா அல்லது சிவநெறியாளரா என்கிற கேள்வியும் இதைப் போலவே ஆகும். புத்தர் பெருமான் பௌத்தரா அல்லது சீர்திருத்தம் வேண்டிய வைதிக பரம்பரையில் ஒருவரா! ஏசுநாதர் புது மதஸ்தாபகரா அல்லது நிஜ யூதரா என்கிற பொருளற்ற விவாதங்கள் அனைத்தும் இவ்வகையானவைகளே!

எந்தச் சமயத்தாராயினும் ஞானமும் பக்தியும் உச்சநிலையை அடைந்து விட்டால் வேறுபாடுகளைத் தாண்டி நின்று ஜோதி வீசுகிறார்கள். இதையறியாமல் வேற்றுமை இலக்கணத்தில் மூழ்கித் தத்தளித்துக் கொண்டு நாம்தான் நம்மைக் குழப்பிக் கொள்கிறோம்.

சென்னையில் நடந்த இளங்கோவடிகள் விழா இந்த ஆராய்ச்சியில் சிக்கிக் கொள்ளாமல் சிறப்பாக நடந்ததைப் போற்றுகிறோம்.

## பனித்துளி

"லண்டனில் ருஷ்யத் தலைவர்களுக்கு ஒரு பார்சல் வந்தது. அந்தப் பார்சலுக்குள் 'பட் பட்' என்று ஏதோ சப்தம் கேட்பதைக் கண்டு பயந்த லண்டன் போலீஸார் அதைத் தண்ணீருக்குள் அமுக்கி மணிப் போட்டு மூடினார்கள். பிறகு பிரித்துப் பார்த்ததில் அதற்குள் ஒரு கெடியாரம் இருந்தது!" —செய்தி

அப்பாடா! 'பட் பட்' என்று அடித்துக் கொண்டிருந்த லண்டன் போலீஸாரின் இருதயமும் அப்புறம்தான் அடங்கியிருக்க வேண்டும்!

★

"அம்பர் சர்க்காவை முதல் முதல் கண்டு பிடித்தவர் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஸ்ரீ ஏகாம்பரம் என்பவர். எனவே அந்த ராட்டையின் பெருமையும் உரிமையும் அவரையே சேர வேண்டும்." —செய்தி

ஏகாம்பர் சர்க்கா என்றே அதன் பெயரை நீட்டி விடலாமே!

★

"கப்பலில் பிரிட்டனுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த ருஷ்யத் தலைவர் குருஷேவ் தமது 62-வது பிறந்த தினத்தை மேற்படி கப்பலிலேயே கொண்டாடி விட்டுப் பயணமானார். துறைமுகத்தில் ஏராளமான பேர் அவரை வழி அனுப்பி விட்டுத் திரும்பிச் சென்றனர்." —செய்தி

அவர்களுடன் அவருடைய அறுபத்தோராவது வயதும் வழி அனுப்பிவிட்டுத் திரும்பிச் சென்றது போலும்!

★

"இரண்டாவது திட்டத்தில் மேலும் பல ஆயிரம் மைல் நீளத்துக்கு ரயில்வேயை விஸ்தரிக்கப் போகிறார்கள்." —செய்தி

இன்னும் பல ஆயிரம் மைல்களுக்கு மேலும் இட நெருக்கடியை ஏற்படுத்தத் திட்டம் போட்டிருக்கிறார்கள் போலும்!

★

"சமீபத்தில் அடித்த சூறாவளிக் காற்றினால் மாங்காய்களும், வாழைக்காய்களும், வெற்றிலையும் வெகுவாகக் குறைந்த விலைக்கு விற்கப்பட்டன." —ஒரு செய்தி



பண்டங்களின் விலை சீக்கிரமே குறையும் என்று நமது முதன் மந்திரி கூறிய ஜோஸ்யம் பலித்துவிட்டது பார்த்தீர்களா?

# என்ன சேதி?

## மதுரை வழி காட்டுமா?

தட்சிணப் பிரதேசக் கொள்கையை வன்மையாக ஆதரித்து மதுரையில் நமது மராமத்து இலாகா மந்திரி திரு ஷண்முக ராஜேஸ்வர சேதுபதி அவர்கள் பேசியிருக்கிறார். மொழியின் அடிப்படையில் ராஜ்ய எல்லைகளைப் பிரிப்பது எவ்வளவு தீமையை உண்டாக்கி யிருக்கிறது என்று மிகத் தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

திருவாங்கூர்—கொச்சி ராஜ்யத்தில் கடலில் போய்ச் சேரும் நீரைத் தடுத்துத் தேக்கினால் வறண்ட பிரதேசமாகிய ராமநாதபுரம் ஜில்லாவைச் சோறு படைத்த சோழ நாட்டுக்கு இணையாக்கலாம். மேல் பெரியாறு அணை கட்டி முடித்தால், இப்பொழுது கீழ்ப் பெரியாறு அணை வளம் படுத்தும் நிலத்தைப் போல் நான்கு பங்குக்கு மேலான நிலத்தை வளப்படுத்தலாம் என்று கூறுகிறார். கீழ்ப் பெரியாறு நீர்த் தேக்கம் ஒரு லட்சத்து அறுபதினாயிரம் ஏக்கர் நிலத்துக்குப் பாய்கிறது. மேல் பெரியாறு நீர்த் தேக்கம் ஆறு லட்சம் ஏக்கருக்கு மேற்பட்ட நிலத்தைப் பொன் விளையும் பூமியாகச் செய்யும் என்று கூறுகிறார். ஆனால் அது இந்தத் தவறான மொழி உணர்ச்சியின் காரணமாகத் தடைப்பட்டு விட்டது என்று அங்கலாய்க்கிறார்.

அப்படியே, கேரளமும் தமிழ்நாடும் இணைய ஒப்புக் கொள்ளாததால் மத்திய சர்க்காரிடமிருந்து பெருந் திட்டங்களுக்காகப் பெற்றிருக்க வேண்டிய நூறு கோடி ரூபாயையும் இழந்து விட்டோம் என்று பெரிதும் வருந்துகிறார்.

இந்தச் செய்திகளை யெல்லாம் சொல்ல வேண்டிய இடத்திலும் சமயத்திலும் சொல்லாமல் இப்பொழுது அங்கலாய்ப்பதைக் கண்டு தமிழர்களுக்குப் பெரு வியப்பாக இருக்கிறது. ஆனால் காலந் தாழ்ந்து விட்டது என்று கூறி வாய் மூடி மௌனியாக இருந்து விடாமல் தட்சிணப் பிரதேசம் சம்பந்தமாகத் தீர ஆலோசித்து, அதன் நன்மைகளை நன்கு உணர்ந்து, மக்களுக்கு விளங்கும்படி காரண காரியத்தோடு பேசியிருக்கும் நமது மராமத்து இலாகா மந்திரியைப் பாராட்டுகிறோம்.

அதுவும் மதுரையில் செல்வாக்கு மிக்க காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் இத்தகைய உண்மைகளை எடுத்துக் கூறியிருக்கிறார். மதுரைப் பொதுமக்கள் கேரளமும்-தமிழ் நாடும் இணைவதால் ஏற்படும் நலன்களை உணர்ந்தார்களானால் தமிழகம் பாரதத்துக்கே ஒரு வழிகாட்டியாக இருக்கும்.

மதுரையம்பதி தமிழகத்தின் இதயபீடமாகப் பண்டை நெடுங்காலமாகவே இருந்து வருகிறது. தமிழகத்தின் சரித்திரத்தில் பன்முறை மதுரை முற்போக்குடன் நின்று வழிகாட்டி யிருக்கிறது. காந்தி மகானின் தலைமையில் தேசமெங்கும் அஹிம்சைப் போர் மூண்டபோது மதுரை தான் முன்னணியில் நின்று தமிழகத்துக்கு வழிகாட்டியது. தீண்டாமைப் பேயை விரட்டும் சீரிய பணியை முதன் முதலில் மதுரை மேற்கொண்டது. தமிழர் சமயத்துக்கும் பண்பாட்டுக்கும் ஊறு விளைவிக்கும் தீயசக்திகள் மேலோங்கிய போது, அவற்றை முளையிலேயே கிள்ளி எறிந்து தமிழகத்தின் பண்பாட்டைக் காப்பாற்றியதும் மதுரை. அத்தகைய மதுரை இம்முறையும், தட்சிணப் பிரதேச விஷயத்தில் தமிழகத்துக்கு வழிகாட்டி உன்னத நிலைக்கு உயர்த்தும் என்று நம்புகிறோம்.



## தீண்டாமை ஒழிக!

பாரதத்தின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவோ தாம் பேசுகின்ற பொதுக்கூட்டங்களில் எல்லாம் இந்த நாட்டிலிருந்து தீண்டாமைப் பேயை அடித்து விரட்ட வேண்டும், சாதிகளை ஒழித்துக் கட்ட வேண்டும் என்று மனம் உருகப் பேசி வருகின்றார். இந்த நாட்டின் எதிர்கால வளர்ச்சி சாதிகளை ஒழிப்பதில் தான் இருக்கிறது என்று அழுத்தம் திருத்தமாக வற்புறுத்திக் கூறி வருகிறார்.

சாதிகளைத் தொலைப்பதற்குக் காங்கிரஸ் மகாசபை சென்ற முப்பது ஆண்டுகளாக அரும்பாடு பட்டு வருகிறது. அதில் நல்ல வெற்றியும் கிடைத்திருக்கிறது என்று கூறலாம். ஆனால் வெற்றி பரிபூரணமாகக் கிடைக்கவில்லை என்பது சென்ற வாரம் பாரதத்தின் புண்ணிய ஸ்தலமான காசியில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியிலிருந்து தெரிகிறது. எல்லா உயிர்க்கும் பொதுவான இறைவனைத் தரிசிப்பதற்காகச் சென்ற ஹரிஜனங்களைக் காசி கோயிலுக்குள் நுழையவிடாமல், கோயில் அர்ச்சகர்கள் தடுத்து நிறுத்தி விட்டனர்.




ருஷ்யாவுடன் இந்தியாவும் பிரிட்டனும் கை கோத்துக் கொண்டு நேசமாக வாழ விரும்புவதைப் போல் அமெரிக்கா விரும்பவில்லை.

இது போன்ற நிகழ்ச்சிகள் பத்திரிகைகளில் பிரசுரமாகாமல் நாட்டில்பல இடங்களில் நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன. திருக் கோயில்களில் ஹரிஜனங்கள், தாராளமாகப் போக முடியாமல் அறிந்தோ அறியாமலோ தடை செய்யும் காரியத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் மனம் மாறும்படி அவர்களைத் திருத்த வேண்டும்.

# சிறுகதைப் போட்டிக்கு நூறுரூபாய் பரிசு

சிறுகதை இலக்கியத்துக்குக் 'கல்கி'ப் பத்திரிகை செய்திருக்கும் சேவை உலகமறிந்த விஷயம். உலகச் சிறுகதைப் போட்டியில் சேர்ந்து தமிழ்ச் சிறுகதைகளை உலகுக்கு அறிமுகப்படுத்தி வைத்திருக்கிறது. அதன் மூலம் தமிழ் நாட்டு எழுத்தாளர்கள் உலக எழுத்தாளர்களுடன் சரிநிகர் சமமாக நிற்பதற்கு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்த பெருமை 'கல்கி' பத்திரிகைக்கு உண்டு என்றால் அது சிறிதும் மிகையாகாது.

இப்பொழுது இன்னொரு நல்ல வாய்ப்பையும் சிறுகதை எழுத்தாளர்களுக்கு 'கல்கி'ப் பத்திரிகை ஏற்படுத்திக் கொடுக்க முன் வந்திருக்கிறது என்பதை மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த மே மாதத்திலிருந்து 'மாதச் சிறுகதைப் போட்டி' ஏற்படுத்தியிருக்கிறோம். இந்தப் போட்டிக்கு வரும் சிறந்த சிறுகதைகளுக்குப் பரிசு ரூபாய் நூறு கொடுக்கப்படும். ஒவ்வொரு மாதச் சிறுகதைப் போட்டியில் தேர்ந்தெடுத்த சிறுகதை அதற்கு அடுத்த மாத இரண்டாவது வாரத்திலேயே வெளியாகும்.

போட்டியில் பரிசு பெற்ற சிறுகதையை முதலில் பிரசுரிக்கும் உரிமை ஒன்றுதான் 'கல்கி'ப் பத்திரிகைக்குச் சொந்தமானது. பிறகு கதையின் ஆசிரியருக்கே கதை உரிமையானது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆகையால் சிறுகதை எழுதும் துறையில் சமீப காலத்தில் பிரவேசித்திருப்பவர்களும் அத்துறையில் புதிதாகப் பிரவேசித்து வெற்றி காண ஆவல் உள்ளவர்களும் தங்கள் திறமையைக் "'கல்கி' மாதச் சிறுகதைப்போட்டி"யில் காட்டுவார்கள் என்று நம்புகிறோம்.

தற்சமயம் தமிழ் நாட்டில் பிரபல சிறு கதை எழுத்தாளர்களாக விளங்குவோரெல்லாம் இச் சிறுகதைப் போட்டியில் கலந்து கொண்டு சிறுகதை இலக்கியம் மேலும் மேலும் ஓங்கி வளருவதற்குத் தொண்டாற்றுவார்களாக!

நேயர்கள் போட்டிக்கு அனுப்பும் சிறுகதையில் தயவுசெய்து அந்தந்த மாதத்தின் பெயரையும் சேர்த்து எழுதி அனுப்ப வேண்டும். இப்பொழுது போட்டிக்கு அனுப்பும் கதைகளில் "மே மாதக் 'கல்கி' சிறு கதைப் போட்டி" என்று குறித்து அனுப்ப வேணும்.

# இலங்கைப் பிரச்னையும் புதிய பிரதமரும்

**ரஜனி**

கொழும்பு, ஏப். 23—

இலங்கைப் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டார நாயகா பதவிக்கு வந்த பிறகு முதன் முறையாகப் பத்திரிகை நிருபர்களின் மகாநாடு ஒன்றைக் கூட்டிப் பல பிரச்னைகளைப் பற்றியும் விரிவாகப் பேசினார். இலங்கை இந்தியப் பிரச்னையைப் பற்றி அவர் முதலில் பிரஸ்தாபித்த பொழுது அடுத்த ஜூன் மாதம் காமன்வெல்த் பிரதம மந்திரிகளின் மகாநாடு லண்டனில் நடக்கும் சமயம் பாரதப் பிரதமர் நேருவைச் சந்தித்து, இலங்கை இந்தியர் பிரச்னையைப் பற்றி உத்தியோகப் பற்றற்ற முறையில் சம்பாஷிக்கப் போவதாயும், உத்தியோக பூர்வமான பேச்சுகள் பிறகு தான் நடைபெற வேண்டுமென்றும் சொன்னார். இலங்கை பார்லிமெண்டின் பட்ஜெட் கூட்டம் ஜூலையில் ஆரம்பித்துச் செப்டம்பர் முடிவுவரையில் நடக்குமாகையினால், இலங்கை-இந்தியப் பிரதம மந்திரிகளின் உத்தியோக பூர்வமான சம்பாஷணை அக்டோபர் மாதத்தில் தான் நடக்க முடியும். அதுவரையில் பார்லிமெண்டில் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் இருக்காதென்பதும் இப்பொழுது தீர்ந்து போன விஷயமாகி விட்டது. இலங்கையின் பதிவுப் பிரஜைகளான இந்திய வம்சாவளியினர்களுக்குத் தனித் தொகுதி அடிப்படையில் தேர்தல் நடத்தி நான்கு ஸ்தானங்கள் கொடுக்க டில்லி ஒப்பந்தத்தில் இலங்கை சம்மதித்திருந்தது. இதற்காக ஒரு சட்டமும் இயற்றப்பட்டது. ஆனால் சென்ற பொதுத் தேர்தலின் பொழுது இந்த நான்கு ஸ்தானங்களுக்குத் தேர்தல் நடத்தப்படவில்லை. இந்தியப் பிரச்னைக்கு ஒரு முடிவு ஏற்படும் வரையில் இந்தியர் பார்லிமெண்டரி பிரதிநிதித்துவப் பிரச்னையும் காத்திருக்க வேண்டுமென்று புதிய பிரதம மந்திரி இவ்வாரம் அறிவித்திருக்கிறார்.

சென்ற பார்லிமெண்டில் இந்தியர்களுக்கு ஒரு நியமனப் பிரதிநிதியாவது இருந்தார். புதிய பார்லிமெண்டிலோ நியமனப் பிரதிநிதிகூட இந்தியர் நலனைப் பற்றிப் பேசுவதற்கு இல்லை.

## மொழிப் பிரச்னை

சிங்களத்தை மட்டுமே ராஜாங்க பாஷையாக்குவதென்ற தீர்மானத்தைப் பார்லிமெண்டில் கொண்டு வருவதென்று தீர்மானித்து விட்டதாயும் இது அரசியலமைப்புத் திட்டத்துக்கு முரணானதென்று யாராவது சவால் விடுத்தால் அந்தச் சவாலை ஏற்கத் தாம் தயாராயிருப்பதாயும் பிரதம மந்திரி இவ்வாரம் அறிவித்திருக்கிறார். சிங்களத்தை உத்தியோக பாஷையாக்குவதற்குத் தயாரிக்கப்பட்டிருக்கும் மசோதாவில் வழக்கிலுள்ள இதர பாஷைகளையும் இஷ்டப்பட்டவர்கள் சுதந்திரமாக உபயோகிக்கலாம் என்று ஒரு ஷரத்து சேர்க்கப்பட்டிருக்கிறது. இதன்படி தமிழ் மொழியைத் தமிழ் பேசும் மக்கள் உபயோகிக்கலாமென்றாலும் ராஜாங்க பாஷை என்ற கௌரவம் சிங்களத்துக்கு மாத்திரமே இருந்து வரும்.

இதுவரை இலங்கையில் தமிழும் சிங்களமும் ராஜாங்க பாஷை விஷயத்தில் சம அந்தஸ்துடன் இருந்து வந்தன. இப்பொழுது தமிழ் மொழி அந்த அந்தஸ்திலிருந்து இறங்குவதற்கு வெகு சாமர்த்தியமாக வழி வகுத்து வருகிறார் புதிய பிரதமர்.

இந்தக் கொள்கையைப் பலமாக ஆட்சேபித்துத் தமிழ்த் தலைவர்களான திருவாளர்கள் ஸி. சுந்தரலிங்கமும் பொன்னம்பலமும் சிம்மாசனப் பிரசங்கத்துக்குத் திருத்தப் பிரேரபணைகளாக இரு பிரேரபணைகளைப் பார்லிமெண்டில் கொண்டு வந்திருக்கிறார்கள். தற்போதுள்ள நிலைமையில் தமிழ் இலங்கை ராஜ்யமொன்றை ஸ்தாபிப்பதைத் தவிர வேறு வழியில்லையென்பதை இவ்விருவரும் வலியுறுத்தியிருக்கிறார்கள். சிம்மாசனப் பிரசங்கத்தைப் பற்றிப் பார்லிமெண்டில் விவாதம் நடக்கும் போது தமிழ் ராஜ்யக் கோரிக்கையைப் பற்றியும் காரசாரமான விவாதம் நடைபெறுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. பாஷாவாரி அடிப்படையில் நாட்டைப் பிரிவினை செய்வதைத் தாம் பலமாக எதிர்ப்பதாயும் ஸ்தல சுயாட்சி சபைகளை ஏற்படுத்தும் யோசனையை வேண்டுமானால் தாம் ஆராயத் தயாராயிருப்பதாயும் மத்திய அரசாங்கத்தில் சமஷ்டி அரசியலை ஏற்படுத்த முடியாதென்றும் பிரதம மந்திரி திட்டவட்டமாக அறிவித்திருக்கிறார்.

## புதிய சீர்திருத்தங்கள்

புதிய அரசாங்கம் பல மாதிரியான சீர்திருத்தங்களை மளமளவென்று செய்து கொண்டு வருகிறது. இலங்கை வானொலியில் ஆங்கில ஒலிபரப்பை 1957-ம் வருடம் முதல் அடியோடு நிறுத்தி விடத் திட்டமிட்டிருக்கிறார்கள். இதற்காக ஆங்கில ஒலிபரப்பு நேரத்தை இப்பொழுதே குறைத்துத் தமிழ் சிங்கள ஒலிபரப்பு நேரத்தை அதிகரித்திருக்கிறார்கள். இலங்கையில் அமெரிக்கர்கள் ஒலிபரப்பும் "வாய்ஸ் ஆப் அமெரிக்கா" ஒலிபரப்பு வெகு விரைவில் இலங்கையிலிருந்து மூட்டை கட்ட வேண்டியிருக்கலாம். ஆசியா மக்களுக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும் விரோதமான நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுவதை அரசாங்கம் தடை செய்திருக்கிறது. இலங்கை மக்களுக்குப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் பல கௌரவப் பட்டங்கள் அளித்து வந்தன. அவ்வாறு பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இதுவரை அளித்துவந்த கௌரவப் பட்டங்கள் அடியோடு ஒழிக்கப்பட்டு விட்டன. இந்தியா சுதந்திரம் பெற்றவுடன் எல்லாத் துறைகளிலும் புது முறைகளை வகுத்தது போல, கௌரவப் பட்டங்கள் வழங்குவதிலும் தனக்குச் சொந்தமான சில புதிய பட்டங்கள் வழங்குவதைக் கையாண்டதல்லவா! அதைப் பின்பற்றி இலங்கையும் புதிய உள்நாட்டுப் பட்டங்கள் வழங்க உத்தேசித்திருக்கிறது.

# கடல் கண்ட கனவு

மணியம்

நான்காம் அத்தியாயம்

## அன்னையின் ஆசி

திரும்பியே பாராமல் வேகமாகச் சென்ற சித்திராங்க பூபதியைப் பின் தொடர்ந்து செல்வது, மந்திரநாயகத்துக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. அத்தனை வேகத்தோடு பாறைகளையும், பள்ளங்களையும், மேடுகளையும், குழிகளையும் தாண்டித் தாண்டிக் கடலின் கரைக்கே வந்து சேர்ந்து விட்டான் சித்திராங்கன். அதன் பிறகுதான் திரும்பிப் பார்த்தான். தட்டுத் தடுமாறி வெகு தொலைவிலே பாறைகளுக்கு மத்தியில் வந்து கொண்டிருந்தார் மந்திரி.

"நீங்கள் மெதுவாக வாருங்கள், பெரியவரே! நான் முன்னால் போகிறேன்" என்று சொல்லிவிட்டு, ஓட்டமும் நடையுமாக நேரே அரண்மனையை நோக்கிச் சென்றான் பூபதி.



சோமு

அத்தனை வேகமாக அவன் அரண்மனையை நோக்கிச் சென்றதன் காரணம், அவனுடைய மனத்தில் அலை வீசிக் கொண்டிருந்த எண்ணக் கடல், அத்தனை ஆவேசத்தோடு கொந்தளித்துக் கொண்டிருந்ததுதான்.

சித்திராங்கன் அரச மாளிகைக்குள்ளே வந்தபோது, அவனுடைய சித்தம் ஒரு நிலையில் இல்லை. மாளிகையின் மூன்றாவது மாடிக்குச் சென்று, நிலா முற்றத்தில் இருந்த பளிங்கு மேட்டிலே உட்கார்ந்து மீண்டும் பலமாக யோசனை செய்தான். ஆகாயத்தில் மோனமாக மிதந்து கொண்டிருந்த அந்தப் பூர்ண சந்திரனைப் பார்த்துக் கொண்டே, ஏதேதோ யோசனை செய்தது அவனுடைய பகுத்தறிவு.



பேரியாழ் என்ற அபூர்வமான இசைக் கருவியைப் பற்றிச் சொன்னாரே மந்திரநாயகம், அதெல்லாம் சரிதான். ஆனால், அது மறைந்ததினால்தான் இந்த வலம்புரித் தீவு பாழடைந்து விட்டது என்று கூறினாரே? அதை எப்படி ஒப்புக் கொள்ளுவது? வெறும் மூட நம்பிக்கையாக அல்லவா இருக்கிறது, விஷயம்?

தமிழ் நாட்டு மூவேந்தர்களுடைய கலையார்வத்தினால் தான் இந்த வலம்புரித் தீவு வளர்ந்தது என்றும், அவர்களுடைய ஏகோபித்த ஆசையினால்தான் கலைஞர்கள் இங்கே குடியேறினார்கள் என்றும் சொன்னார். அதெல்லாம் சரி. ஒப்புக் கொள்ள வேண்டிய விஷயங்கள்தான். ஆனால் அந்தத் தமிழ் வேந்தர் மூவரும் கடந்த நூறு ஆண்டுகளாக ஏன் இந்தத் தீவின் பக்கமே தலை காட்டவில்லை?

பேரியாழ் மறைந்ததற்கும் அந்த மன்னர்கள் இங்கே வருவதை நிறுத்தியதற்கும் என்ன சம்பந்தம் இருக்கக் கூடும்? இந்தத் தீவின் வளர்ச்சியிலே கண்ணும் கருத்துமாக இருந்த தமிழ் மன்னர்கள், இந்த நூறு ஆண்டுகளாக இந்தத் தீவையே மறந்து விடுவதற்கு என்ன காரணம் ஏற்பட்டது?

வலம்புரித் தீவின் காவல் தெய்வம் கண்ணீர் வடிக்கிறது என்று சொன்னாரே மந்திரநாயகம்! என்ன ஆச்சரியமான நிகழ்ச்சி இது! தேவதை எங்காவது கண்ணீர் வடிக்குமா? அப்படியே கண்ணீர் வடித்தாலும் அந்த அழுகைக் குரல் நம்முடைய செவியிலே கேட்குமா? என்ன விநோதமான சமாசாரம் இது!

ஆனால் அந்த நிசி நேரத்திலே தன்னுடைய செவியிலுங்கூட அந்த அழுகுரல் தெளிவாகக் கேட்டதே! அது ஒன்றும் வீண் மன மயக்கு இல்லையே! எத்தனை அருகிலே அந்தக் குகைப் பாறைக்குள்ளேயிருந்து வந்தது அந்த அழுகுரல்! நெஞ்சை எப்படி உருக்கியது அது! எவ்வளவு கூர்மையாக அதைக் கவனித்தான் அவன்! அதை எப்படி வெறும் கற்பனை என்று சொல்வது? இல்லை. அது வெறும் கற்பனையில்லை. இல்லவே இல்லை.

சித்திராங்கன் பளிங்கு மேடையிலே சாய்ந்தவாறு, சந்திரனைப் பார்த்துக் கொண்டே மீண்டும் யோசித்தான்:

வட்டப்பாறையிலே நின்ற சிலையிலிருந்து இசை எழுந்ததல்லவா? அந்தச் சிலைக் கன்னியின் கையிலே சாத்தியிருந்த வீணையிலிருந்து, ஏழு ஒலிகளும் ஏறியும் இறங்கியும் ஒலித்தனவே! இதுபோல அந்தக் குகைப் பாறைக்குள்ளும் ஏதாவது ஒலிக்கிறதோ! அந்த ஒலிதான் ஒரு பெண்ணின் அழுகுரலாகக் கேட்கிறதோ!

பூபதி தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான்: என்ன விசித்திரமான நினைப்பு இது! எங்காவது கல்லில் அலைகள் தவழ்வதினால் ஏற்படுகிற ஒலி, ஒரு பெண்ணின் அழுகுரலைப் போல இருக்குமா! இராது!

ஏன் இராது? வீணையின் மந்தரத் தந்திகள் பேசும்போது மனிதக் குரல் போலவே ஒலிப்பதில்லையா? கைதேர்ந்த வைணிகன் ஒருவன், தந்தியையும் இதயத்தையும் ஒன்றாக மீட்டி, உணர்ச்சி மயமான லயத்திலே நின்று வீணையை இழைக்கும் போது, சோக மயமான குரல் போன்றே கேட்குமே! மனித சாரீரம் பாடுவது போலவே இருக்குமே! கடலிலே தண்ணீர்

சிதறும்போது வீணையின் நரம்புகளைப் போல ஒலி எழும்படியாகக் கல்லிலே வீணையின் சிற்பத்தை, ஒரு அதிசயக் கலைஞன் செய்து நிறுத்த முடியும் என்றால், அந்தக் குகைப் பாறைக்குள்ளே ஒரு பெண்ணின் சோகக் குரல் ஒலிக்கும் படியாகவும் அவனால் ஏன் செய்ய முடியாது? நிச்சயம் முடியும்! என்றாலும் நம்புவதற்குக் கஷ்டமாக இருக்கிறது! ஆனால் சாதாரணமாக எல்லாரும் நம்புகிற முறையிலே ஒரு காரியத்தைச் செய்கிறவனுக்கு என்ன சிறப்பு உண்டு? எளிதில் நம்ப முடியாத அற்புதங்களைச் செய்து காட்டுகிறவன் தானே அதிசயப் பிறவி! வலம்புரித் தீவின் கலைகள் எல்லாம் அப்படிப் பட்ட ஆச்சரியமான படைப்புக்கள் தானே? உண்மையில் தமிழ் மக்கள் மற்ற நாட்டு மக்களைவிட உயர்ந்த நிலையை அடைந்ததே, அவர்களுடைய அற்புதமான கலைச் சிருஷ்டிகளினால் தானே? எளிதில் நம்ப முடியாத 'கொல்லிப் பாவை' என்ற அற்புதச் சிற்பத்தைப் பற்றிப் பழந் தமிழ்க் காவியங்கள் எல்லாம் பேசுகின்றன. வானூர்திகளையும், பாடும் சிலைகளையும், பறக்கும் பறவைச் சிலைகளையும் பற்றித் தமிழருடைய கலைநூல்கள் பேசிப் பேசி ஆனந்தக் கூத்தாடுகின்றன. அப்படிப்பட்ட வித்தைத் தமிழரின் பரம்பரையிலே வந்த வலம்புரிக் கலைஞர்கள், இப்படிப்பட்ட ஓர் அற்புதத்தையும் ஏன் செய்திருக்கக் கூடாது?



இப்படி யெல்லாம் பல்லாயிரம் சிந்தனைகள், அந்தக் கருநீலக் கடலிலே வட்டப் பாறையில் உள்ள சிற்பங்களின் மீது தவழும் அலைகளைப்போல, சித்திராங்க பூபதியின் இதய வட்டத்திலே அலை வீசிச் சரிந்து கொண்டிருந்தன. இரவு முழுதும் அவன் உறங்கவே யில்லை.

சூரியோதயம் ஆயிற்று. வானம்பாடிகளும், இரைக் குருவிகளும் கோலாகலமாகக் கீதம் இசைத்துக் கொண்டு கடலுக்கு மேலே சிறகை அடித்தபோதுதான், பூபதி பளிங்குக் கட்டிலை விட்டு எழுந்தான். எழுந்து வெளியே தாழ்வாரத்துக்கு வந்தான். என்ன ஆச்சரியம்! அங்கிருந்த சாய்வுத் திண்டின்மீது உட்கார்ந்து கொண்டு மந்திரநாயகம், இளவரசனின் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தார். பூபதி திகைத்துப் போய் விட்டான்.

"என்ன இது! நீங்களும் இரவு உறங்கவில்லையா? இத்தனை நேரமும் இங்கேயா உட்கார்ந்து கொண்டிருந்தீர்கள்?" என்று கேட்டான் சித்திராங்கன்.

"ஆமாம். நீ மட்டும் உறங்காமல் விழித்திருக்கலாம். உன்னுடைய விழிப்புக்குக் காரணமான நான் மட்டும் உறங்கி விடவா! அதெப்படி நியாயம்?" என்று கேட்டார் மந்திரி.

"என்னுடைய விழிப்புக்குக் காரணம் நீங்கள் இல்லையே! உண்மையில் நீங்கள் சொன்ன விவரங்கள் ஒன்றையும் நான் நம்பவில்லையே!" என்றான் சித்திராங்கன்.

"அப்படியானால் ஏன் விழித்துக் கொண்டிருந்தாய்? சொல்!" என்றார் பெரியவர்.

"யாழ் மறைந்ததினால் வலம்புரித் தீவு இந்தக் கதிக்கு உள்ளாயிற்று என்று சொன்னீர்கள் அல்லவா? அது எப்படி உண்மையாக இருக்க முடியும்? அது எப்படிப் பொருத்தமான காரணமாகும்? என்று யோசித்தேன்!"

"அப்படியென்றால்......?"

"இந்தத் தீவின் காவல் தெய்வம் கண்ணீர் வடிக்கிறது என்று சொன்னீர்களே! அது எவ்வளவு பெரிய மூட நம்பிக்கை என்று, நானே எனக்குள் யோசித்துக் கொண்டிருந்தேன்! சிரிப்புத்தான் வந்தது!" என்றான் சித்திராங்கன்.

"பூபதி! ஏதேதோ பேசுகிறாய். இந்த வாலிபப் பேச்செல்லாம் சரிதான். ஆனால் கடைசியாக ஒரு சபதம்

செய்து விட்டு ஓடி வந்தாயே, அது தான் என்னைக் கவலைப்படுத்துகிறது.''

இப்படிச் சொல்லும்போது மந்திர நாயகத்தின் குரல் தழதழத்தது. பூபதி அவரை நோக்கிச் சொன்னான் :

''பெரியவரே! உண்மையாகச் சொல்லுகிறேன். இந்த வலம்புரித் தீவின் தாழ்வுக்குக் காரணமாக அமைந்த நிகழ்ச்சி என்ன என்பதைக் கண்டு பிடித்தால் ஒழிய, என் மனத்தில் நிம்மதி ஏற்படப் போவதில்லை. பல்லவர்களுடைய ஆணையின் ஆதிக்கத்தினால் தமிழ் மன்னர்கள் இந்தத் தீவை மறந்தார்களா? அல்லது, இந்தத் தீவுக்கு வருகிற யாத்திரிகர்கள், ஏதாவது தவறான செய்திகளைத் தமிழ் நாட்டிலே பரப்பி விட்டார்களா? அல்லது இங்கிருந்து சென்ற மல்லிநாயகப்பாணர் ஏதாவது சூழ்ச்சிக்கு உள்ளாகி, விபரீதமான சம்பவங்கள் நடந்து விட்டனவா? அறிவுக்குப் பொருந்துகிற முறையில் இப்படி ஏதாவது ஒரு காரணம் இருக்க வேண்டுமே! அதைக் கண்டு பிடிக்க முயற்சிப்பது தான் என்னுடைய கடமை. கண்டு பிடிப்பதோடு இல்லை. அந்தக் காரணத்தின் ஆணி வேரை ஆராய்ந்து கைப்பற்றி அதைக் களைந்தெறிய வேண்டும். அதனால்தான் உங்களிடம் நான் அப்படி ஒரு சபதம் செய்தேன்! அதில் தவறு ஒன்றும் இல்லையே!'' என்றான் சித்திராங்கன்.

மந்திர நாயகம் ஒன்றுமே பதில் பேசவில்லை. கன்னத்தில் கை வைத்து உட்கார்ந்தவர், வெகு





நேரம் அப்படியே இருந்தார். பிறகு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே சொல்லுவார் :

"தம்பி! எது ஏதானாலும் சரி. நீ மட்டும் இந்தத் தீவை விட்டுப் புறப்படுவதை அரசியார் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். உன்னுடைய தந்தை மறைந்த ஆண்டிலிருந்து, உனக்குப் பருவம் ஆகி, உன்னை மகுடம் சூட்டிப் பார்க்கும் நாள் எப்பொழுது வரும், எப்பொழுது வரும் என்று ஏங்கிக் கொண்டிருந்தார்கள். இந்த ஆண்டில் எப்படியும் உனக்குப் பட்டம் சூட்டி விட வேண்டும் என்று துடிதுடிக்கிறார்கள். நீயோ —"

"இல்லை! மந்திரி அவர்களே! நீங்கள் பெண் உள்ளத்தோடு பேசுகிறீர்கள். வெறும் பொம்மையாக என்னைச் சிம்மாசனத்திலே அமர்த்திப் பார்க்க விரும்புகிறீர்கள். அது தவறு. இத்தனை பெரிய கலைத் தீவில், இத்தனை பெரிய அற்புதங்களைச் சாதித்த மகான்களின் பரம்பரையிலே, நான் ஒரு கோழையாக, ஒரு மரக் கட்டையாக, உட்கார்ந்துவிட விரும்பவில்லை. இந்தப் பூமியிலே விநோத சித்தர்களாக நின்ற அற்புதக் கலைஞர்களின் கனவுகள், இன்று சிதைந்து கிடக்கின்றன. அவர்களுடைய பரம்பரை, வளராமல் எங்கோ கடல் கடந்து சென்று விட்டது என்பதைக் காணுகிறேன். இந்த நிலையில், மீண்டும் இந்தத்தீவிலே அந்தப் பரம்பரைக்கு மறுமலர்ச்சி உண்டாக்குவது, என்னுடைய கடமையாகும். யாரும் என்னைத் தடை செய்ய முடியாது — அரசியார் உள்பட!"

இப்படிச் சொல்லி விட்டுச் சித்திராங்கன் அந்த இடத்தை விட்டு நடந்தான். நேரே படிகளில் வேகமாக இறங்கி, அந்தப்புரம் சென்றான். 'அம்மா' என்று அன்போடு மகாராணியை அழைத்தவாறு!

"குழந்தாய்! ஏன் உன் கண்ணெல்லாம் சிவந்திருக்கிறது? இரவு உறக்கம் இல்லையா?" என்று கேட்டாள் அரசி.

"இல்லை அம்மா! நான் உறங்கவில்லை!" என்றான் சித்திராங்கன்.

"ஏனப்பா, உறங்கவில்லை? உடம்பு என்ன உனக்கு?" என்று கவலையோடு கேட்டாள் அன்னை.

"அம்மா! இத்தனை நாளும் நீங்கள் ஒரு விஷயத்தை என்னிடம் சொல்லாமல் மறைத்துத்தானே வந்திருக்கிறீர்கள்!" என்று குழந்தையைப் போலவே கேட்டான், அரசியின் குழந்தை சித்திராங்கன்.

"என்ன சொல்கிறாய் கண்மணி! உன்னிடம் எதை இரகசியமாக வைத்து விட்டேன்!" என்று மகாராணி கேட்டாள்.

"இந்த வலம்புரித்தீவு ஒரு காலத்தில் மகோன்னதமான மாயாபுரியாக இருந்ததாமே. சென்ற நூறு ஆண்டுகளாகத்தானே இந்தத் தீவு ஒளியிழந்து கிடக்கிறதாம். இதன் காரணத்தை நீங்கள் என்னிடம் சொல்லவே இல்லையே!" என்று கேட்டான் சித்திராங்கன்.

"மகனே! இது என்ன கேள்வி! அன்றிருந்த அரச குடும்பமும் அரச விசுவாசமுள்ள குடிமக்களும் இன்றுந்தான் இருக்கிறார்களே. யாரும் எங்கும் போய் விடவில்லையே!" என்றாள் மகாராணி.

"அவர்களைச் சொல்லவில்லை அம்மா. இங்கே நின்ற ஆயிரக்கணக்கான சிலைகள், அதிசயம் அதிசயமான சிற்பக் கனவுகள்—இவையெல்லாம் இன்று எங்கே?" என்று கேட்டான் பூபதி. அவனுடையகுரலில்உருக்கம்இருந்தது.

"சித்திராங்கா! குடிமக்கள் இன்னும் இங்குதான் இருக்கிறார்கள். கலைமக்கள் தான் மறைந்து விட்டார்கள். எங்கிருந்தோ வந்து குடியேறியவர்கள், எங்கேயோ குடியோடிப் போய் விட்டார்கள். அவர்களுக்குப் பின் அவர்கள் ஆக்கிய சிற்பங்களையும் இந்தக் கருங்கடல் கொண்டோடிப் போய்விட்டது. இதிலென்ன ஆச்சரியம் இருக்கிறது!"

இந்தச் சாதுரியமான பதிலைக் கேட்டு, சித்திராங்கன் ஒரு கணம் மௌனமாக இருந்தான். தன்னுடைய தாயைப்பெற்ற பாட்டன் அரசியல் சாமர்த்தியம்நிறைந்த ஒரு பெரிய அறிவாளி என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறான். அப்படிப்பட்ட பாட்டனின் அறிவு, தாயாரிடமும் ஒளி விசுவது போல அவனுக்குப் பட்டது. அவன் கேட்டான் :

"அம்மா! அதெல்லாம் சரி. இந்தத் தீவிலே பேரியாழ் என்று ஒரு வாத்

நியம் இருந்ததாமே. அது இப்பொழுது எங்கே?'' என்று பூபதி கேட்டான்.

அவ்வளவுதான்! 'பேரியாழ்' என்ற வார்த்தை வந்ததும் அரசியின் கண்ணிலே இதுவரை இருந்த ஒளி மங்கிப் போய், அப்படியேகண்ணீர் துளித்தது.

''மந்திர நாயகம் வந்து உன்னிடம் ஏதாவது சொல்லி விட்டாரா? ஐயோ! அந்தக் கடற்கரையிலே இரவு நேரத்தில் அந்த இடத்துக்குப் போய் விட்டாயா? பூபதி! என்னிடம் ஒளிக்காமல் சொல்லிவிடு. இந்த வலம்புரித் தீவின் அரசியாக நின்று கேட்கிறேன். மறைக்காதே. நீ வட்டப்பாறைக்குப் போய் விட்டாயா? உண்மையைச் சொல்!''

மகா ராணியின் வார்த்தைகளில் கட்டளைக்கு மேலாகக் கலவரமும், கடுமையும், ஆற்றொணாத வேதனையும் தொனித்தன. பூபதி இதைக் கவனித்தான்.



''அம்மா! பதறுகிறீர்கள். நீங்கள் இந்த வலம்புரித் தீவின் அரசியாக நின்று என்னைக் கேள்வி கேட்க வேண்டும் என்பதே என் விருப்பம். சொல்கிறேன். நான் சொல்கிறபடியேயும் அரசியாகவே நின்று கேட்டுவிடுங்கள். பின்னைப் பாசத்தை மறந்து விடுங்கள்!'' என்றான் பூபதி.

''யாரங்கே! மந்திர நாயகத்தை உடனே அழைத்து வா!'' என்று உத்தரவிட்டார் வலம்புரி நாயகி.

அவ்வளவுதான். இதன் பிறகு சம்பவங்கள் மிக மிகத் துரிதமாக நடந்தன. அலைமேல் அலை வந்து சரிவது போல், ஒன்றன்பின் ஒன்றாக அடுத்தடுத்து நடந்தன.

மந்திர நாயகம் வந்தார். அவர் பேசினார். சேனாபதி வந்தார். அவர் பேசினார். ராஜ குடும்பத்தின் குலகுரு வந்தார். அவரும் பேசினார். ஆனால் எவருடைய பேச்சும் சித்திராங்க பூபதியின் செவியில் ஏறவில்லை.

''பேரியாழோடு திரும்பி வருவேன். அதுவரை மகுடம் என் தலையில் ஏறாது! நீங்கள் சொல்கிற வார்த்தைகளும் என் செவியில் ஏறாது!'' என்றான் சித்திராங்கன்.

மகாராணி ஒரு பெண்ணாக நின்று அழுதாள். ஒரு தாயாக நின்று கதறினாள். மறைந்து சென்ற அரசனின் தேவியாக நின்று இரங்கி வேண்டினாள். சித்திராங்க பூபதி சற்றும் அசைய வில்லை.

''மகாராணியாக, வலம்புரித் தீவின் பேரரசியாக நின்று பேசுங்கள்! உங்கள் கடமையைச் செய்யுங்கள். இந்த நூறு ஆண்டுகளாக நடந்துவந்த பொம்மைக் கொலு இனி வேண்டாம். வலம்புரித் தீவின் வளர்ச்சிக்கு ஏதோ ஒரு சக்தி எதிராக நின்று வேலை செய்கிறது, தமிழ் நாட்டிலே! மறைந்து போன யாழோடு இந்தத் தீவின் வாழ்வும் மறைந்து நிற்கிறது. அந்த நிலையை என்னால் இனித் தாங்க முடியாது. இந்தத் தீவுக்கு வாழ்வு அளியுங்கள்!'' என்றான் பூபதி.

அவனுடைய பேச்சிலே உண்மை இருந்தது. அவனுடைய எண்ணத்திலே பரிசுத்தம் இருந்தது. அவனுடைய மனத்திலே உன்னதமான இலட்சியம் சுடர் விட்டது. அதை யாராலும் மறுத்துச் சொல்ல முடியவில்லை.

ஆமாம்; சித்திராங்க பூபதி வலம்புரித் தீவை விட்டுப் புறப்படுவது என்பது உறுதியாகி விட்டது. கண்ணீர் வடித்தவர்கள் எல்லாம், அந்தக் கண்ணீரால் பயனில்லை என்று கண்டு தெளிந்தார்கள். அந்தத் தெளிவிலே பிறந்த அறிவோடு, சித்திராங்க பூபதிக்கு விடை கொடுத்து அனுப்பச் சித்தமானார்கள்.

மந்திரநாயகத்தின் மன நிலையை இப்படி அப்படி என்று வர்ணிப்பதற்கில்லை. அந்த வட்டப் பாறைக்கு இளவரசனை அழைத்துச் சென்றவர், பேசாமல் அவனோடு திரும்பியிருக்கக் கூடாதா? எதற்காக அந்த யாழைப்

பற்றி இத்தனை விவரங்களும் சொன்னேனம் என்று வருந்தினர். தம்மாலேதான் இத்தனை சம்பவங்களும் நடந்தன என்று தம்மைத் தாமே நொந்து கொண்டார். ஆனாலும் அவருடைய உள்ளம் தெய்வ நம்பிக்கையிலே உருவான உள்ளம். அந்த வலம்புரி அம்மன், முடிவில் ஏதோ ஒரு பெரிய நன்மையை உத்தேசித்துத்தான் இப்படியெல்லாம் நடத்துகிறாள் என்று, உள்ளத்தின் அந்தரங்கத்தில் எண்ணிக்கொண்டு, ஒருவாறு மனத்தைத் தேற்றிக் கொள்ள முயற்சித்தார்.

மகாராணியின் உள்ளமோ அந்தக் கடலைப்போல ஒரு பேரன்புக் கடல். பட்டம் சூட்டக் கனவு கண்டு கொண்டிருந்த மகன், இப்படிக் கடல் கடந்து செல்கிறானே என்று கண்ணீர் வடித்தாள். ஆனால் அதே சமயம், அந்தத் தீவின் எதிர்காலத்துக்குத் தான் எடுத்துக் கொள்ள வேண்டிய நடவடிக்கைகளின் அவசியத்தை, தன் மகன் தனக்கே எடுத்து உணர்த்தும் போது, அதுவும் நியாயம் என்றே தோன்றிற்று. அவளுடைய இதயம் இங்கும் அங்கும் ஊஞ்சலைப்போல் ஆடியது. என்றாலும் பேரரசி என்ற கடமையினால், அன்னை என்ற பாசத்தைப் போர்த்தி மூடிவிட முயன்றாள். ஆனாலும் கரைக்குள்ளே அடங்காமல் பொங்கி வந்து சிற்பங்களை மூழ்கடித்த அந்த வலம்புரிக் கடலைப் போல, அவளுடைய பாசமும் பொங்கி எழுந்து கடமைகளை மூழ்கடிக்க முயன்றது.

"அம்மா! தயங்காதீர்கள். விடை கொடுங்கள். உங்களுடைய புதல்வனின் நெற்றியிலே திலகத்தை இடுங்கள். வெற்றியோடு சென்று வெற்றியோடு மீள்கிறேன். நான் கரை வந்து சேர்வதற்குள், நான் மீட்டுகிற யாழின் ஒலி உங்கள் செவியிலே வந்து கேட்கும்!" என்றான் சித்திராங்கன், மண்டியிட்டு வணங்கிக் கொண்டே!

"கண்ணே! வெற்றியோடு சென்று வா. உனக்கு நான் வேறு என்ன சொல்லுவேன்! வீரத் தமிழர் பரம்பரையில் உதித்தவன் நீ. விடை கேட்கிறாய். உனக்கு வீரம் ஊட்டி வழியனுப்ப வேண்டியவள் நான். சென்று வா மகனே! இதோ இந்தச் சித்திரத் தந்தப் பேழையை அன்னையின் ஆசீர்வாதமாக வாங்கிக் கொள். கடல் கடந்து தமிழ் நாட்டின் எல்லையிலே மிதிக்கும் வரையில், இதைத் திறந்து பாராதே. தமிழ் மண்ணிலே கால் வைத்த பிறகு இதைத் திறந்து பார்! உன்னுடைய யாத்திரையில் உனக்குத் துணையாக இது இருக்கட்டும். எப்பொழுதாவது ஏதாவது சிக்கலான எண்ணங்கள் உள்ளத்தில் உதிக்கும் பொழுதெல்லாம், உனக்கு வழி காட்டுவதற்கு நான் பக்கத்தில் இருக்க மாட்டேன். எனக்குப் பதில் இந்தச் சித்திர மடல் உன்னோடு இருக்கட்டும். தீவிரமான சந்தேகங்கள் உன்னைக் குழப்பும் போதும், சஞ்சலமான எண்ணங்கள் உன் மனத்தில் தோன்றும் போதும், பெரியபெரிய கேள்விகளுக்கு நீ விடை காணத் துடிக்கும் போதும், உனக்கு இது நண்பனாகவும், ஆசாரியனாகவும், தெய்வமாகவும் நின்று வழிகாட்டுமாக!! இது அன்னையின் பரிசு!"



இப்படிச் சொல்லும் போது பிள்ளைப் பாசத்தினால் விம்மிவிட்டாள் மகாராணி. அவள் தந்த அந்தத் தந்தப் பேழையை, முக்கோண வடிவத்திலே பூட்டி வைக்கப்பட்டிருந்த அந்தச் சித்திரப் பேடகத்தை, இரண்டு கைகளினாலும் வாங்கினான் பூபதி. சேடிப் பெண்கள் குரவை இட்டுத் தூபம் தாங்கி வலம் சுற்றினார்கள். மங்கல கோஷங்கள் முழங்கின. மணிகள் ஒலித்தன. சித்திராங்க பூபதி, வலம்புரித் தீவின் அரச மாளிகையிலிருந்து மகத்தான நம்பிக்கையோடும், உன்னதமான இலட்சியங்களோடும் செந்தமிழ் நாட்டை நாடிப் புறப்பட்டான். தாயின் விடையோடு தாய் நாட்டுக்குப் பிரயாணமானான் அந்த வீர மகன்! (தொடரும்)



# இப்புது வத்னி உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும்

நாவா சோப்புத் தயாரிப்பில் முதல்வரான கோத்ரெஜ் தயாரிக்கும் இந்த தூய்மையான சோப் உங்களுக்கு புத்துணர்வும் அதிக வசீகரமும் அளிக்கும். எங்கும் மக்களுக்கு உற்சாக மளித்ததைப்போலவே அது உங்களுக்கும் உற்சாகமளிக்கும்.

## வத்னி★

கடைசி செதில் வரை புதுமையும் நறுமணமும் வாய்ந்தது.




மற்றும் வத்னி பேபி 2 அணா

ஆரோக்கியத்திற்கும் வசீகரத்திற்கும் திறவு கோல்

'சாவி' மார்க்

கோத்ரெஜ்

சலவை சோப்புத் தூள்கள்
ஷேவிங் ஸ்டிக் • ஹேர் டானிக்
டாய்லெட் பவுடர்

★ 'தாய்நாடு' என்று அர்த்தம் கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.




ஸ்வதேசி
நிர்வாகம்
மூலதனம்

# மே 4 முதல் ஆரம்பம்

# காலம் மாறிப்போச்சு

சாரதி சித்திரம்



டைரக்ஷன்-தாபி சாணக்யா

ரிலீஸ்
ஏவி எம்

"ஏரு பூட்டிப் போவாயே அண்ணே, சின்னண்ணே" இதுதான்
ஒரிஜினல் ட்யூன்.....போலியைக் கேட்டு ஏமாறாதீர்கள்! ..........

மே மாதம் 11-ம் தேதி முதல்

சென்னை ஸ்ரீ கிருஷ்ணா - வெலிங்டன் - உமா

# வீழ்க ஹைட்ரஜன் குண்டு!

(சில பத்திரிகை அபிப்பிராயங்கள்)

சாவி



## ஸநாதன ஸம்வர்த்தினி!

(ஆஸ்திகர்களின் ஒரு பக்ஷ வெளியீடு)

ஸ்ரீ பகவான் அனுக்கிரகத்தில் நிகழும் துன்முகி நாம சம்வத்ஸரத்தில் சகல லோகப் பிரஜைகளும் சகலவித சௌபாக்கியங்களுடனும் வாழ்வார்களாக. ஆனாலும் அமெரிக்கா என்கிற பாதாள லோக வாசிகளாகப் பட்டவர்கள் ஹைட்ரஜன் பாம் என்னும் பயங்கர நாச குண்டை உற்பத்தி செய்து வைத்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ருஷ்யாளும் பாபாத்மாக்களே. அவாளும் அமெரிக்காளுக்குப் போட்டியாக ஹைட்ரஜன் குண்டை வைத்துக் கொண்டு பயமுறுத்துகிறதாகப் படுகிறது. இவாளுடைய போட்டா போட்டியில் அகிம்சாவாதிகளான நாம் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. இவான் குண்டு நம் சிரசில் அல்லவா விழும்? இது மகா அக்கிரமம்! நம் அதர்வண வேதத்திலிருந்து அஸ்திர சஸ்திர வித்தைகளைத் திருடிக் கொண்டது மல்லாமல் நம் சிரசிலேயே குண்டைப் போடுவேன் என்று சொல்லுவது நீட்டிய விருக்ஷத்தையே கூர் பார்ப்பதாகும். இதை நாம் சர்வதேச நியாயஸ்தலத்தில் விக்ஞாபித்து ஆக்ஷேபிக்க வேண்டும். 'சர்வேஜனஸ்ஸுகினோ பவந்து' என்கிற வேதவாக்குக்கு நாம் கிஞ்சித்தாவது கைங்கர்யம் செய்வோம். 'ததாஸ்து' என்று அஷ்டதிக் பாலகான் ஆசீர்வதிப்பது நமக்குச் சிரவணமாகிறது.

## கோழிக்குஞ்சு

(பாலர் பத்திரிகை; வயது முதிர்ந்த பாலர்களும் படிக்கலாம்.)

தம்பிகளே, தங்கைகளே, இன்று கோழி அண்ணாவாகிய நான் உங்களுக்கு ஹைட்ரஜன் குண்டைப் பற்றிச் சொல்லப் போகிறேன். ஏற்கனவே உங்களுக்குக் கோலிக் குண்டு, பொரிவிளங்காய்க் குண்டு இவ்விரண்டைப் பற்றியும் சென்ற இதழ்களில் சொல்லியிருக்கிறேன். பொரிவிளங்காய்க் குண்டுக்கே பயப்படாத நீங்கள் ஹைட்ரஜன் குண்டைக் கண்டு துளியும் அஞ்சமாட்டீர்கள். ஹைட்ரஜன் குண்டு விழட்டும். அது விழுந்தால் பள்ளிக்கூடத்தின் மேல் தான் விழும். உங்களுக்கெல்லாம் லீவு கிடைக்கும். பரீட்சைப் பேப்பர்களெல்லாம் எரிந்து விடும். பிறகு வாத்தியார் எல்லாருக்கும் பாஸ் போட்டு விடுவார். பிறகு, நீங்கள் நிம்மதியாகக் கோழிக் குஞ்சைப் படித்துக் கொண்டே கோடை விடுமுறையைக் குஷியாகக் கழிக்கலாம். ஆனால் பள்ளிக்கூடத்தின் மேல் விழும் குண்டு எல்லா இடங்களையுமே அழித்து விடும் என்ற காரணத்துக்காக மட்டுமே ஹைட்ரஜன் குண்டை எதிர்க்க வேண்டியிருக்கிறது. என்ன? நான் சொல்வது சரிதானே?

## பிரதிவாதி

(யாரையும் பகைக்காத ஒரு நாள் இதழ்)

ஹைட்ரஜன் குண்டு பற்றி நமது ஆட்சேபணையை ஏற்கனவே சொல்லியிருக்கலாம். ஹைட்ரஜன் குண்டுக்குள் விஷவாயு அடங்கியிருக்கிறதா இல்லையா என்பதை பாண்டுங் மகாநாட்டில் விசாரித்தார்களா, இல்லையா என்பது தெரிந்தும் தெரியாமலும் இருந்து வருகிற விஷயம். மனித இனத்துக்கு அது எப்படியும் ஆபத்தானது என்பதை 'மான்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையில் டி. டி. ஹோட்ஸ் என்பவர் விளக்கியிருப்பதாக ரஹஸ்ய பூர்வமான ஒரு செய்தி கிடைத்திருப்பதாக விஷயமறிந்த வட்டாரத்தில் பேசிக் கொள்வதாகத் தெரிகிறது.

எப்படியாயினும் வல்லரசுகள்கூடி ஹை. குண்டு பரீட்சை நடத்துவதைத் தடை செய்யத் தகுந்த நடவடிக்கை உடனே எடுக்க வேண்டுமென்று சிலர் அபிப்பிராயப்படுவதாலும் ஹைட்ரஜன் குண்டு சம்பந்தமாகப் பல சிக்கலான பிரச்னைகள் தோன்றியுள்ளதாலும் இதனால் உலக நாடுகளின் சர்வ நாசம் நிச்சயம் ஏற்படும் என்று ஒரு பயம் இருந்து வருவதாலும் 'அது வீழ்க!' என்று நாம் சொல்லுமுன் சில காலம் பொறுத்துப் பார்க்காமல் இருந்து பொறுத்துப் பார்த்து விடுவதே நலம்.

# ஜ்யோதிஷ  தர்ப்பணி

(நவக்கிரஹ கணிதபூர்வமாக வருங்காலம் சொல்லும் திங்கள் வெளியீடு)

வரப்போகும் அக்னி நட்சத்திரத்தில் ஹைட்ரஜன் குண்டு விழுந்தால் அதனால் எல்லா நாடுகளும் பஸ்மீகரமாகிவிடும் என்பதற்குப் பல கிரகங்களின் சேர்க்கை அறிவிக்கிறது. தினந்தோறும் நவக்கிரஹ பூஜை செய்து வந்தால் பீடா பரிகாரம் ஏற்படும். கும்ப ராசிக்காரர்களைக் குஜன் பார்ப்பதால் ஹைட்ரஜன் குண்டு அவர்களுக்கு ஹானி ஏற்படுத்தாது. ஒன்பதில் குருவும் ஆறும் வீட்டில் புதனும் இருப்பதால் மேற்திசை நாடுகள் க்ஷேமப்படும். ஹைட்ரஜன் குண்டு வீழ்ந்தால் மக்களிடையே ஜன்ம வியாதிகள் உண்டாக ஹேது உண்டு. மூன்று ரூபாய் மணியார்டர் அனுப்பி வைத்தால் மூலம், கிருத்திகை, பூரட்டாதி, கேட்டை இத்தியாதி நட்சத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு ஒரு மண்டலம் பூஜை செய்து ஸ்புடம் செய்த செப்புக் கவசத்தில் 'ஹைட்ரஜன் பீடா பரிகரணம்' என்னும் மந்திரத்தைப் பொறித்துத் தபாலில் அனுப்பி வைக்கிறோம். ஒரு வருஷ பலன் வேண்டுவோர் கூட ஒரு ரூபாய் மணியார்டர் அனுப்பக் கோருகிறோம்.

# புலவர் விருந்து

(முத்தமிழ்த் துறையின் முறை போகிய சந்நிய வித்தகர் நீத்திய வெளியீடு)

சென்று அண்மையில் கூடிய புத்தாண்டு தினத்தில் தமிழ் வாகடப் புலவ மணிகள் சலவாயு குண்டு பற்றி ஆராயப் போந்தது மெச்சற் பாலது. ஆயுர்வேத இலக்கணத்தில் இதுபற்றி யாங்கணும் எக்கருத்துமே வெளியிடப்படாதது வியப்பேயாம். புலவ மணிகள் அடங்கிய மாநாடு சலவாயு குண்டின் ஆபத்து பற்றி ஐயந்திரிபற உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளக்கியுள்ளது குறித்து இறும்பூது எய்துகிறோம். எது எவ்வாறாயினும் தமிழ் மறை தந்த வள்ளுவப் புலவர்,

"எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும்
அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு"

என்று பறை யறைந்திருப்பதால் சலவாயுப் பொருள் பற்றி இன்னும் யார் யார் வாயெல்லாமும் கேட்ட பிறகே எமது மடல் ஒரு முடிவான கருத்தை வெளியிடும்.

# சனிமலர்

(சனிக்கிழமைதோறும் வெளியாகும் வார ஏடு)

நமது நாட்டுக்கு இரு எதிர்ப்பு நாடுகள் தோன்றியிருக்கின்றன. ஆம்; அந்த இருநாடுகளும் அமெரிக்காவும் சோவியத் ருஷியாவும்தான். நமது நாட்டின் பொறுப்பு அதிகம். அபாயம் அண்மையில் அணுகி விட்டது. தோழர்களே, தோள் கொடுங்கள்; போர்முரசம் கொட்டுங்கள். அக்கிரமம்! அநியாயம்! அரசியல் சூழ்ச்சி; வடவரின் வஞ்சனை! அமெரிக்காவும் ருஷியாவும் கண்டு பிடித்திருப்பது என்ன? ஹைட்ரஜன் குண்டு! 'ஹை' என்பதும் 'ஜ' என்பதும் ஆபத்தான எழுத்தேயல்லவா? ஆகவே இது சூழ்ச்சிக் கும்பலின் பித்தலாட்டம். அவர்களின் ஆதிக்கம் ஒழிக! இட்ரசன் குண்டு வீழ்க! இல்லை; இல்லை; ஒழிக!

# நெய்வேலியில் கருப்புத்தங்கம்

## 9. நிலக்கரிச் சுரங்கம்

நெய்வேலி நிலக்கரிச் சுரங்கப் பகுதியில் நான் கண்டது, கேட்டது, அறிந்தது, பிறகு சாவகாசமாக விசாரித்துத் தெரிந்து கொண்டது, ஆகியவற்றைச் சுருக்கமாக இங்கே நேயர்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன்.

நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்ப்பதற்குச் செல்லும் போது எதிரில் ஒரு பெரிய மலையைப் பார்த்தோம். தென்னார்க்காட்டில் அதிலும் நெய்வேலிப் பகுதியில் மலை ஏது! என்று ஒரு கணம் வியப்பு ஏற்பட்டது.

இதை எப்படியோ அறிந்து கொண்ட அதிகாரி, "என்ன இந்த மலையைப் பார்த்து வியக்கிறீர்களோ!" என்றார்.

"ஆமாம்."

"இது இயற்கையாக எழுந்த மலையில்லை. செயற்கை மலை."

"அப்படி என்றால்!"

"நிலக்கரிச் சுரங்கத்தை வெட்டும் போது தோண்டி எடுத்த மண்ணை இங்கு போட்டு வைத்திருக்கிறார்கள். அது இப்படிச் சிறிய மலை போலக் காட்சி தருகிறது."

"மலையளவு மண் எடுத்துக் கொட்ட வேண்டுமானால் எவ்வளவு பெரிய பள்ளம் தோண்டியிருக்க வேண்டும்!"

"அறுநூறு அடி நீளம், அறுநூறு அடி அகலம் உள்ள சுரங்கம் அது. அதாவது மூன்று லட்சத்து அறுபதினாயிரம் சதுர அடி பரப்பு உடையது. இரண்டாயிரத்து நானூறு அடி சுற்றளவு உடையது."

இந்தக் கணக்கைக் கேட்டதும் எனக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்து விட்டது. நிலக்கரிச் சுரங்கத்தின் ஆழம் எவ்வளவு பெரிதாக இருக்கும் என்று கற்பனை செய்து பார்த்தேன். ஒன்றும் புலப்படவில்லை. நேரிலேயே பார்த்து விடுவது என்று சுரங்கத்தை அடைந்தோம். மேல் தளத்திலிருந்து, அதாவது தரையிலிருந்து, சுரங்கத்தைப் பார்த்த போது பயமாகத்தான் இருந்தது. "அப்பப்பா! எவ்வளவு ஆழமான சுரங்கம்!" என்று ஆச்சரியப்படத் தான் வேண்டியிருந்தது.

வாருங்கள், சுரங்கத்துக்குள்ளே இறங்குவோம். எந்தவிதமான கஷ்டமும் இல்லாமல் ஜீப் வண்டியின் மூலம் சுரங்கத்துக்குள் போவதற்கு வசதியான சாலையிருக்கிறது. ஆனாலும் அதன் வழியாகச் சென்றால் சுரங்கத்துக்குள் இறங்கிச் சென்ற உணர்ச்சியைப் பெறமுடியாது. ஆகையால் நடந்தே செல்வோம்.



# பகீரதன்

எல்லாம் மண் படிகள்தான். காலை ஜாக்கிரதையாக ஊன்றி வைத்து நிதானமாக இறங்க வேண்டும். இறங்கும்போது ரொம்ப சுகமாக இருக்கிறது. ஆனாலும் மிகுந்த கவனத்துடன் அவசரப்படாமல் இறங்க வேண்டும். சற்றுக் கால் இடறினால் சுமார் இருநூறு அடி ஆழத்தில் போய் விழவேண்டியதுதான். ஜாக்கிரதையாகப் படிகளைப் பார்த்துக் காலை வையுங்கள். நடுநடுவில் தண்ணீர் கசிந்து சிறு சிறு வாய்க்கால்களாக ஓடுகிறது. அவைகள் எல்லாம் சுரங்கத்தில் விழுந்து விடாமல் ஒரு இடத்தில் தேக்கி அங்கிருந்து சக்தி வாய்ந்த குழாய் மூலமாக அந்தத் தண்ணீரை இறைத்துப் பூமிக்கு மேலே கொண்டு தள்ளுகிறார்கள். இந்த இடத்துக்கு வந்ததும் எதேச்சையாக எதிரில் தெரிந்த வெள்ளைக் கறுப்புக் கோட்டைப் பார்த்தேன். அறுபத்தேழு அடி என்று போட்டிருந்தது. ஏதோ ரொம்ப நேரம் இறங்கி வந்தது போலிருந்தது. அறுபத்தேழு அடிதானா இறங்கி யிருக்கிறோம் என்று ஒரு கணம் திகைப்பாகத்தான் போய்விட்டது.

மீண்டும் மண் படிகளில் காலை ஊன்றி வளைந்தும், நெளிந்தும் சென்ற பாதைகள் வழியாகப் பாதாளத்தை நோக்கியே சென்றோம். நூற்று நாற்பத்தைந்தடி இறங்கியவுடன் அந்த இடத்தில் ஒரு சமதளம் இருந்தது. அதற்குக் கீழே இறங்குவது அவ்வளவு சுலபமல்ல. ஆனாலும் இவ்வளவு தூரம் வந்துவிட்டுச் சுரங்கத்தின் அடி வரையில் போகாமல் திரும்பி வந்தால் நன்றாக இருக்குமா! ஆகவே அதற்குக் கீழேயும் செல்லுவதற்கு முயன்றோம்.

இந்த இடத்திலிருந்து கீழே பத்தரை அடி குறுக்களவுக்குக் கிணறு வெட்டி யிருக்கிறார்கள். அந்தக் கிணற்றில் இரும்பு உறைகளைப் போட்டுப் பக்கத்தில் உள்ள மண் சரிந்து விடாமல் வேண்டிய பலமான பாதுகாப்பு செய்திருக்கிறார்கள். அதற்குள் இறங்குவதற்குப் படிகள் கிடையா. ஆனால் ஒரு ஊஞ்சல் ஏணி இருக்கிறது. அந்த ஊஞ்சல் ஏணி பாதாளக் கிணற்றுக்குள், அதாவது நிலக்கரிச் சுரங்கத்துக்குள் இறங்குவதற்கும் ஏறுவதற்கும் வேண்டிய சாதனங்களுடன் இருக்கிறது. மேலே தகிக்கும் வெயிலாக இருந்தாலும் உள்ளுக்குள் குளுகுளு என்று இருக்கிறது. கீழே சுமார் முப்பதடி சென்றவுடன் நிலக்கரிப் பாறையைப் பார்க்க முடிகிறது. தமிழ்நாட்டின் எதிர்காலத்தை மாற்றி அமைக்கும் கறுப்புத் தங்கம் பாறையாக இருக்கிறது. நிலக்கரிப் பாறையைப் பார்த்தவுடன் அற்புதமான புதையல் கிடைத்து விட்டது போன்ற



மகிழ்ச்சி ஏற்படத்தான் செய்தது. மனத்தில் இனந் தெரியாத உற்சாகம். எத்தனை எத்தனையோ இன்பக் கனவுகள் தோன்றின.

தமிழ் நாட்டுக்கு மட்டுமல்லாமல் பாரத நாட்டையே மகோன்னதமாக்கும் நிலக்கரியை எடுக்கும் திருப்பணியில் ஈடுபட்டு உழைத்து வரும் தொழிலாளர்களை, தொழில் நிபுணர்களை எல்லாம் அந்த இடத்தில் இருந்து நினைத்துப் பார்த்தேன். ஆகா! அவர்கள் சேவை எவ்வளவு மகத்தானது! அவர்களை மனத்திற்குள்ளாகவே பாராட்டினேன். அவர்கள் புனித முயற்சியை வாய்விட்டுப் போற்றினேன்.

நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தை இந்த நிலைமைக்குக் கொண்டு வருவதற்கு உழைத்த ஒரு தொழில் நிபுணரைப் பற்றிப் பெருமையோடு சொன்னார்கள். அந்தத் தனி மனிதருடைய அபார சாதனையைப் பாருங்கள்.

## 10. தொழில் நிபுணரின் சாதனை

நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தை வெட்டும் திருப்பணியை ஒரு தொழில் நிபுணரிடம் ஒப்படைத்திருந்தார்கள். 1947-ம் ஆண்டு பிஹார் மாகாணத்தில் ஒரு தனிப்பட்ட சுரங்கத்தில் தொண்டாற்றி வந்த திரு எச். கே. கோஷிடம் நிலக்கரிச் சுரங்கத்தை நிர்மாணிக்கும் வேலையை ஒப்படைத்திருந்தார்கள்.

திரு கோஷ் தமக்கு இட்ட பணியை நல்ல முறையில் நிறைவேற்ற முன் வந்தார். உடனே நெய்வேலிக்கு வந்தார். அவருக்குத் தமிழ் மொழி பேச வராது. ஆனாலும் எப்படியோ அங்குள்ள மக்களுடன் தொடர்பேற்படுத்திக் கொண்டார். சுமார் இருபத்தைந்து சதுரமைல் வெளியில் கையினால் பூமியைத் துளைபோடும் சாதாரண யந்திரக் கருவியைக் கொண்டு பூமியைக் குடைந்தார். மனித உழைப்பும் கையினால் இயக்கும் சாதாரண யந்திரக் கருவியைக் கொண்டும் எவ்வளவு ஆழத்துக்குப் பூமியைக் குடையமுடியும்? ஆனாலும் உள்ளம் சோர்ந்து போகாமல் சுமார் இரண்டு ஆண்டுகள் பூமியைப் பல இடங்களில் குடைந்து குடைந்து பார்த்தார். அதற்குமேல் அவருக்குச் சுரங்கத் தொழில் நுணுக்கம் தெரிந்த தொழிலாளர்களின் ஒத்துழைப்பு வேண்டியிருந்தது! பிஹார் நிலக்கரிச் சுரங்கத்தில் தொண்டாற்றிக் கொண்டிருந்த நாலு ஐந்து தமிழ் நாட்டுத் தொழிலாளர்களை வரவழைத்தார். அவர்களுக்குத் தொழில் நுணுக்க அறிவோடு திரு கோஷிடம் அவருடைய பாஷையில் பேசுவதற்கும் முடிந்தது! அவர்கள் வங்கமொழியும், ஆங்கிலமும், தமிழும் தெரிந்த தொழிலாளிகள். ஆகவே அவர்கள் துணையோடு தென்னார்க்காட்டு மக்களிடம் சுலபமாகத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு அவர்களுடைய உதவியைப் பெற்று வந்தார்.

நாளடைவில் பூமியைக் குடைவதற்கு வேண்டிய நவீன வசதியுள்ள பெரிய யந்திரங்கள் வந்தன. இன்னும் பல தொழில் நுணுக்கம் தெரிந்த தொழிலாளர்கள் உற்சாகமாகத் தொண்டாற்ற முன் வந்தனர். அவர்கள் தோண்டிய பாதாளச் சுரங்கம்தான் இந்தச் சுரங்கம். திரு கோஷ் இப்பொழுது நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தில் இல்லை. ஆனாலும் அவருடைய திறமைக்கும், தொழிலாளர்களின் போற்றுதற்குரிய உழைப்புக்கும் எடுத்துக்காட்டாக இருக்கிறது நிலக்கரிச் சுரங்கம்.

இந்தச் சுரங்கத்தைக் குடைவதற்கு உபயோகப்படுத்திய நவீன யந்திரத்தையும், நிலக்கரிக்கு அடியில் உள்ள தண்ணீரைக் கொண்டு வந்து கொட்டும் மிகப் பெரிய தண்ணீர்க் குழாயையும், நூற்று ஐம்பதடிக்குக் கீழே இருக்கும் நிலக்கரிச் சுரங்கத்துக்குச் செல்லும் பத்தரை அடி அகலம் உள்ள உறைக் கிணற்றிலிருந்து ஒரு தொழிலாளி நிலக்கரியை எடுத்துக் கொண்டு மேலே வருவதையும், நெய்வேலிச் சுரங்கத்தின் பொதுவான தோற்றத்தையும் கட்டுரையின் ஆரம்பத்தில் உள்ள நாலு புகைப்படங்களிலும் காணலாம்.

## 11. விலையுயர்ந்த பொன்

பிரத்யக்ஷமாக வெட்டியிருக்கும் நிலக்கரிச் சுரங்கத்தின் அடியிலிருந்து மேலே அண்ணாந்து பார்த்தால் எத்தனையோ வர்ணங்களில் மண் இருப்பது தெரிந்தது. அடடா! மண்ணில்தான் எத்தனை வகைகள் என்று எண்ணிக் கொண்டிருக்கும்போதே, "இவைகள் எல்லாம் மண் அல்ல சார்! விலையுயர்ந்த பொன்!" என்றார் சுரங்க அதிகாரி.

"பொன்னா!" என்று கேட்டுச் சிரித்தேன்.

"சிரிப்பதற்கு ஒன்றுமில்லை. உண்மையிலேயே இவைகள் எல்லாம் விலையுயர்ந்த பொன்" என்று சொல்லிப் பூமி மட்டத்துக்குக் கீழ் உள்ள மண் அமைப்பைக் கூர்ந்து பார்க்கும்படி கேட்டுக் கொண்டார்.

மேலே அற்புதமான மண். தானிய வகைகள் விளைவிக்கும் சக்தி வாய்ந்த சாரம் நிறைந்த மண். அதற்கும் கீழே மஞ்சள் நிறக் களி மண், பிறகு களிப்பு கலந்த மணல், அதற்கும் கீழே வெள்ளை நிறக் களிமண், பிறகு கடினமான கல், கடலூரல் கூழாங்கல் படிவும், பின்னர் தான் நிலக்கரி. நிலக்கரிக்குக் கீழே தண்ணீர். தண்ணீருக்கும் கீழே என்னென்ன அதிசயங்கள் இருக்கின்றனவோ! அவைகளை இன்னும் நிபுணர்கள் ஆராய்ச்சி செய்யவில்லை.

"வெள்ளைக் களிமண் இருக்கிறதே! இது தான் பொன்" என்றார் அதிகாரி.

"அதெப்படி!"

"இந்த வெள்ளைக் களிமண் எத்தனையோ கோடி டன் நெய்வேலியில் கிடைக்கும். இந்தக் களி மண் தூய வெள்ளையாகவும் இருக்கிறது. சிவப்பு கலந்த வெள்ளையாகவும் இருக்கிறது. இந்த மண்ணைக் கொண்டு பலப் பல அற்புதங்களைச் சாதிக்கலாம். இந்த மண்ணைப் பொன்னுக்கும் திருப்பணியிலே ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் ஈடுபட்டு உழைக்க முடியும். பீங்கான் தொழிற்சாலை ஒன்றை உடனே நிறுவலாம். சாதம் சாப்பிடும் தட்டுகள், தண்ணீர் குடிக்கும் குவளைகள், டீ, காப்பி சாப்பிடும் கப், சாஸர் முதலியவைகள் எல்லாம் செய்யலாம். இதற்கும் மேலே சக்தி வாய்ந்த மின்சாரத்தைத் தாங்கும் இன்சுலேட்டர்கள் செய்யலாம். அதாவது மின்சாரக் கம்பம், தந்திக் கம்பம் முதலியவைகள் மீது பீங்கான் குப்பிகள் பொருத்தி வைத்திருக்கின்றனவே! அவை போன்ற குப்பிகள் செய்யலாம். கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள். நமக்கு எத்தனை லட்சம், லட்சம் என்ன, கோடிக்கணக்கான குப்பிகள் தேவைப்படும் என்று. இன்னும் பல வழிகளில் இந்த வெள்ளைக் களி மண் உபயோகப்படும். ஏன், சிமென்ட் தொழிலுக்குக் கூட உபயோகப்படுத்தலாம். பிளாஸ்டர் ஆப் பாரிஸ் என்ற மாவை, எத்தனையோ துறைகளில் உபயோகமாகும் அதிசய மாவைத் தயாரிக்கலாம்" என்று உற்சாகத்துடன் கூறினார்.

அவர் சொன்ன விஷயங்களைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே எதிரில் தெரிந்த வெள்ளைக் களிமண் அப்படி அப்படியே அருகில் உள்ள தொழிற்சாலைக்குச் சென்றது. அங்கு எத்தனையோ வித சாமான்களாக மாறி வெளிவந்த காட்சியைக் கண்டேன். மண் பொன்னாக மாறும் அதிசயத்தைப் பார்த்தேன். எல்லாம் மானசீகமாகத்தான். விரைவில் நாட்டு மக்கள் எல்லோரும் நேர்முகமாகப் பார்த்துப் பயன்பட்டு மகிழும் நன்னாளை நம்பிக்கையுடன் எதிர்பார்க்கலாம்.

பாதாளச் சுரங்கத்திலிருந்து மேலே ஏறுவோம். இறங்கும்போது இருந்த சுகம் இப்பொழுது இல்லை. கலகல என்று பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும் விவாதமிட்டுக் கொண்டுமிருந்த பத்திரிகையாளர்கள் எல்லாரும் மௌனமாகி விட்டார்கள். கார

மனம்கவர் மணம்

டிராலி

# டால்க் பவுடர்



ணம் பேசுவதற்கு முடியவில்லை. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க ஆரம்பித்து விட்டது! முழங்கால்கள் வலிக்க ஆரம்பித்து விட்டன; சுமார் நூற்று ஐம்பது அடி உயரம் ஏறுவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது. இந்த மாதிரி எத்தனையோ முறை ஏறி ஏறி, இறங்கி இறங்கி மண்ணை வெட்டி மேலே கொண்டு வந்து சேர்த்திருக்கும் தொழிலாளர்களைக் கையெடுத்துக் கும்பிட வேண்டும். அவர்களுடைய உழைப்பும் தியாகமும் எத்தனை எத்தனையோ லட்சக்கணக்கான மக்களுக்குப் பயன்படப் போகின்றன என்று நினைந்து அந்தத் தொழிலாளர்கள் பெருமைப்படலாம். எண்ணற்ற மக்களுடைய நல்வாழ்க்கைக்காகப் பாடுபடுவதை விடச் சிறந்த இன்பம் உலகில் வேறு என்ன இருக்கிறது!

வழியிலே பல இடங்களில் நின்று நின்று ஓய்வெடுத்துக் கொண்டு மேலே வந்தோம். மேலே வந்தவுடன் காலைத் தரையில் ஊன்றி நிற்க முடியவில்லை. கால்கள் இரண்டும் 'கிடு' 'கிடு' என்று நடனமாட ஆரம்பித்து விட்டன. தாகம் வேறு நாவை வறட்டிக் கொண்டிருந்தது. ஆளுக்கு இரண்டு தம்ளர் தண்ணீர் குடித்தோம். அப்போது ஏற்பட்ட இன்பத்துக்கு ஈடே கிடையாது, போங்கள்.

## 12. மின்சார உற்பத்தி நிலையம்

வாருங்கள், மின்சார உற்பத்தி நிலையத்துக்குச் செல்வோம். இந்த நிலையத்தில் ஐயாயிரம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யலாம். இங்கு உற்பத்தியாகும் மின்சாரத்தைக் கொண்டுதான் நிலக்கரிச் சுரங்கத்துக்கு வேண்டிய மின்சாரத்தை உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள். நிலக்கரி வெட்டி எடுக்க ஆரம்பித்து விட்டால் இங்கு இரண்டு லட்சம் டன் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யும் நிலையத்தை அமைத்து விடலாம். இதற்கு வேண்டிய தண்ணீரும், நிலக்கரியும் இங்கேயே கிடைக்கின்றன. அதிலும் இங்கு கிடைக்கும் தண்ணீர் மின்சார உற்பத்திக்கு உபயோகப்படுத்துவதற்கு வேண்டிய நல்ல தண்ணீர் என்பது நாமெல்லாம் இரட்டிப்புச் சந்தோஷம் அடைய வேண்டிய காரியம்.

1960-ம் ஆண்டில் அதாவது இன்னும் நான்கு ஆண்டுகளுக்குப் பின் இங்கு முதலில் ஐம்பதினாயிரம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யக்கூடிய மின்சார நிலையத்தை ஏற்படுத்திவிடலாம். இதை மேட்டூர், சென்னை மின்சார இணைப்புடன் சேர்த்து விட்டால், சென்னை ராஜ்யம் மட்டுமல்ல, ஆந்திரா, திருவாங்கூர்-கொச்சி முதலிய பிரதேசங்களுக்கும் தாராளமாக மின்சாரம் கிடைக்கும். இப்பொழுது ஏற்பட்டு வரும் மின்சார வெட்டு போன்ற வேண்டாத தொல்லைகள் ஏற்பட மாட்டா என்று கூறினார் நிலக்கரிச் சுரங்க அதிகாரி.

இன்னும் உர உற்பத்தித் தொழிற்சாலையும் ஏற்படுத்தலாம். சேலத்தில் முப்பது கோடியே எழுபத்து ஐந்து லட்சம் டன் இரும்பும், ஒன்பது கோடி டன் அலுமினியமும், அறுபது லட்சம் டன் பாக்ஸைட்டும் கிடைக்கின்றன என்று ஆராய்ச்சியாளர்கள் கணக்கெடுத்துக் கூறியிருக்கிறார்கள். இவைகளையெல்லாம் உபயோகப்படுத்தி இரும்பு, அலுமினியம், ரசாயனத் தொழிற்சாலை முதலியவைகள் ஏற்படுத்தலாம். இத் தொழிற்சாலைகள் எப்போது காரியத்தில் நிறைவேறப் போகின்றன என்று எண்ணி ஏங்காமல் இருக்க முடியவில்லை.



அறுநூறு அடி நீளம் அறுநூறு அடி அகலம் இருநூறு அடி ஆழமுள்ள மிகப் பெரிய நிலக்கரிச் சுரங்கத்தின் தோற்றம்

** ** **

இந்தக் காரியங்களை யெல்லாம் விரைவில் நிறைவேற்றி வைக்க முடியாதா!

பொதுஜன அரசாங்கம் - சுயராஜ்ய சர்க்கார் இதை விரைவில் நிறைவேற்றும்.

ஆனால் எல்லாக் காரியத்திலும் காணும் ஊழல்கள் இதிலும் ஏற்படுத்த இடம் கொடுக்கக் கூடாது! நிலக்கரிச் சுரங்கம் விரைவில் வேலை செய்வதற்கு வேண்டிய காரியங்களில் அதிக கவனம் செலுத்த வேண்டும். எந்த இடத்திலும் தயக்கமும், தேக்கமும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

சுரங்க வேலைகளில் ஈடுபட்டு உழைக்கும் தொழிலாளர்கள், சர்க்கார் அதிகாரிகள், நிபுணர்கள் எல்லாரும் தேச பக்தியுடன் தொண்டாற்றும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

## 13. ஆராய்ச்சிக் கூடம்

நிலக்கரி ஆராய்ச்சிக் கூடத்தைப் பார்த்து விட்டால் நெய்வேலி நிலக்கரிச் சுரங்கப் பகுதி முழுவதையும் பார்த்துவிட்ட திருப்தியுடன் இங்கிருந்து திரும்பி விடலாம்.

இதோ ஆராய்ச்சிக் கூடம். இங்கு நெய்வேலி பழுப்பு நிலக்கரியில் என்னென்ன இருக்கின்றன என்று ஆராய்கிறார்கள். அதற்கு வேண்டிய நிபுணர்கள் தனித்தனியே இருந்து மிகுந்த ஊக்கத்துடன் தொண்டாற்றி வருகிறார்கள். இவைகளை நேரில் பார்க்கும்போது ஒரே

வியப்பாக இருக்கிறது. சாதாரண நிலக்கரிக்குள்தான் எத்தனை எத்தனை பொருள்கள் மறைந்து கிடக்கின்றன. பெட்ரோல் என்ன! தார் என்ன! பினாயில் என்ன! இப்படிப் பலப் பல பொருள்கள் அதனுள் மறைந்து கிடக்கின்றன. அவைகளைத் தனித் தனியே பிரித்து எது எது எந்தெந்த அளவு இருக்கிறது என்பதை யெல்லாம் மிகுந்த கவனத்துடன் ஆராய்கிறார்கள். அந்தக் காட்சிகளை எழுத்திலே கொண்டுவந்து காண்பிக்க முயன்றால் அது ஒரு நீண்ட கட்டுரையாகி விடும். ஆகையால் அவைகளைச் சமயம் நேரும்போது நேரில் பார்த்துத்தான் அனுபவிக்க வேணும்.

வெள்ளைக் களி மண்ணில் என்னென்ன செய்யலாம் என்பதை அங்குள்ள மாதிரி ஆராய்ச்சிக் கூடத்தில் செய்து பார்க்கிறார்கள். மண்ணைப் பிசைந்து குயவர் தம் கை வண்ணத்தினால் எத்தனையோ அதிசயப் பொருள்களைப் படைத்து விடுகிறார் அல்லவா! அதே முறையில் வெள்ளைக் களிமண்ணை மின்சாரத்தைக் கொண்டு சுழலும் வட்டத்தில் வைத்து, பல அற்புத சாமான்களைச் செய்யும் அதிசயத்தைப் பார்த்து வியந்தோம்.

அதிகமான உஷ்ணத்தைத் தாங்கும் சக்தி படைத்த கற்களும் நெய்வேலிக் களிமண்ணால் செய்ய முடியும் என்பதைச் செய்து வைத்திருக்கிறார்கள். நெய்வேலி பூமிக்கு அடியில் இருப்பது மண் அல்ல 'பொன்' என்றாரே நெய்வேலிச் சுரங்க அதிகாரி, அது எவ்வளவு உண்மை, முக்காலும் உண்மை என்பதை ஒவ்வொரு இடத்திலும் பார்த்துப் பார்த்து அனுபவித்து வியந்தோம்.

இந்த ஆராய்ச்சிக் கூடத்தில் சிறிய அளவில் செய்து பார்க்கும் பொருள்கள்தான் பிறகு மிகப் பெரிய தொழிற் சாலைகளில் உற்பத்தியாகப் போகின்றன. பல ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் ஆயிரக் கணக்கான எண்ணிக்கை அளவில் அருமையான பல பொருள்களைச் செய்து குவிக்கப் போகிறார்கள். அதற்கு வேண்டிய நல்ல அடிப்படையைச் சிறந்த முறையில் வகுக்கும் கூடம்தான் இந்த ஆராய்ச்சிக் கூடம்.

ஆராய்ச்சிக் கூடத்தை விட்டு வெளி வரும் போது மனத்தில் எத்தனையோ எண்ண அலைகள் வந்து மோதிக் கொண்டிருந்தன. வளம் நிறைந்த எதிர்காலத் தமிழகமே எதிரில் வந்து நின்றது. அந்தக் கற்பனைத் தமிழகத்துக்கு மூலப் பொருளாக விளங்கும் நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்துக்குக் கைகூப்பி ஒரு வணக்கம் செலுத்திவிட்டு அங்கிருந்து கிளம்பினோம்.

## முடிவுரை

திரும்பி வரும் பொழுது பத்திரிகையாளர்கள் தங்கள் அபிப்பிராயங்களை மனம் விட்டுப் பரிமாறிக் கொண்டு வந்தனர்.

இந்தச் சாதனையை வெற்றிகரமாக்கும் சக்தி இங்கு பாடுபடும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் கையில்தான் இருக்கிறது! ஆனால் சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பற்றி என்னத்தைச் சொல்வது என்று திருப்தியில்லாமல் குறைப்பட்டுக் கொண்டு வந்தார்கள்.

ஆனால் அப்படிக் குறைப்பட வேண்டிய அவசியம் இல்லை என்பதை அங்கு பணியாற்றி வரும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களை நேரில் கண்டறிந்திருந்தும் அவர்களுடன் விவாதித்துப் பார்த்ததிலிருந்தும் தெரிந்தது.

ஆகையால் ஒரு முக்கியமான விஷயத்தை மட்டும் குறிப்பிட்டுவிட்டு இந்தக் கட்டுரையை முடிக்க விரும்புகிறேன்.

மிகத் திறமையாளர்களும், ஊக்கமும் உழைப்பும் நிறைந்துள்ள உத்தமர்களுமான எத்தனையோ சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் சேவையை நேரில் பார்த்திருக்கிறேன்.

நெய்வேலி நிலக்கரிச் சுரங்க அதிகாரி திரு டி. எம். எஸ். மணி, திரு ஏ. சீனிவாசன் ஆகியவர்கள் அப்படிப்பட்ட சிறந்த சர்க்கார் உத்தியோக வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்.

அவர்கள் இந்திய சர்க்கார் மந்திரிகளுடன் ஒத்துழைத்துத் திறமையாகக் காரியம் செய்து நிலக்கரிச் சுரங்கத்தைப் பற்றி நாட்டு மக்கள் கொண்டிருக்கும் கனவை நனவாக்குவார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

** ** **

நிலக்கரிச் சுரங்கம் வேலை தொடங்கி விட்டால் அதற்கு வேண்டிய தொழில் நிபுணர்கள் வேண்டாமா! இதற்காக அண்ணாமலைச் சர்வகலாசாலையில் நிலக்கரிச் சுரங்க சம்பந்தமான தொழில் நுணுக்கப் பகுதி ஒன்றை ஆரம்பித்து மாணவர்களைத் தயாரித்து வருகிறார்கள் என்று அறிந்தேன். தமிழ் நாட்டு மாணவர்கள் இதை நன்கு பயன்படுத்திக் கொள்வதற்கு முன் வரவேண்டும். நிலக்கரிச் சுரங்கத்துக்கு வேண்டிய தொழில் நிபுணர்கள் வெளியில் இருந்துதான் வரவேண்டும் என்ற அவசியம் நேராமலும், தொழில் நுணுக்க நிபுணர்கள் பற்றாக்குறை ஏற்படாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஏராளமான மாணவர்கள் நிலக்கரிச் சுரங்க சம்பந்தமான தொழில் நுணுக்கங்களைப் பயின்று நெய்வேலியில் உற்சாகத்துடன் தொண்டாற்ற முன் வந்தால் நிலக்கரி எடுக்கும் பணியை வெற்றியுடன் நிறைவேற்றலாம். அதன் மூலம் லட்சக்கணக்கான ஏழை எளிய மக்களின் பசிப்பிணி தொலையும்; அவர்கள் பெண்டு பிள்ளைகளின் கண்ணீர் நீங்கும். தமிழ்நாடு எல்லா விதமான வளங்களிலும் சிறந்து மகோன்னதமாக விளங்கும்.

வெட்டுக் கனிகள் செய்து
தங்க முதலாம்
வேறு பல பொருளும்
குடைந் தெடுப்போம்.

** ** **

ஆயுதம் செய்வோம், நல்ல
காகிதம் செய்வோம்;
ஆலைகள் வைப்போம், கல்விச்
சாலைகள் வைப்போம்;
ஓயுதல் செய்யோம், தலை
சாயுதல் செய்யோம்;
உண்மைகள் சொல்வோம், பல
வண்மைகள் செய்வோம்.

—பாரதியார்

வெள்ளித்திரை

# வேடன் கண்ணப்பா

## காந்தன்

டைமண்ட் பிலிம்ஸாரின் "வேடன் கண்ணப்பா" படத்தைப் பார்க்க நேர்ந்த போது நான் மிகவும் சிரமப்பட்டுப் போனேன்.

படத்தின் ஒவ்வொரு காட்சியும் என் மனதில் வேறு காட்சியை விரித்து வைத்தது; பாத்திரங்களின் நடிப்பு, பேச்சு, பாட்டு எல்லாம் என் உள்ளத்தில் வெவ்வேறு உணர்ச்சிகளை உண்டாக்கிக் கொண்டிருந்தன !

அழிந்தும் அழியாமலும், தெரிந்தும் தெரியாமலும் இருக்கும் அஜந்தா குகைச் சித்திரங்கள் பார்ப்பவர் மனத்தை எத்தகைய உணர்ச்சியில் ஆழ்த்துகின்றன! புகையுண்ட ஓவியம் போலக் கண்ணுக்குப் புலனாகாத அச்சித்திரங்களின் பல பகுதிகளைக் கொண்டு அவற்றின் மேன்மையை, உயர்வை, இணையற்ற தன்மையை மனக் கண்ணால் பார்க்க முயல்கிறோம். அழிந்து போன ஓவியங்களையும், சிதிலம் அடைந்த சித்திரங்களையும் மனத்தினாலேயே பூர்த்தி செய்து, 'ஒரு காலத்தில் இச் சித்திரங்கள் வண்ண ஓவியங்களாக இப்படித்தானே திகழ்ந்திருக்கும் !' என்று நினைத்து வியப்பில் ஆழ்ந்து விடுகிறோம் அல்லவா!

அதேமாதிரிதான் "வேடன் கண்ணப்பா" படத்தைப் பார்த்த போது பல இடங்களில் உணர்ச்சி வசப்பட்டு, கண்களைக் கெட்டியாக மூடிக்கொண்டு, அகக் கண்ணில் தோன்றிய அதிசயக் காட்சிகளைக் கண்டு அநுபவித்தேன். 'ஆகா, இதே காட்சி நல்ல முறையில் தயாரிக்கப்பட்டிருக்குமானால் எப்படியிருந்திருக்கும் ! இதே பாத்திரத்தை வேறு நல்ல நடிகர் ஏற்று, பாவத்தோடு நடித்திருந்தால் எப்படியிருந்திருக்கும்! ஆகா, இந்தச் சம்பாஷணை இப்படி யமைந்திருந்தால் எப்படியிருந்திருக்கும்! இந்தப் படத்தை ஒரு நல்ல டைரக்டர் நல்ல முறையில் கவனம் செலுத்தி எடுத்திருந்தால் எப்படியிருந்திருக்கும் !' என்றெல்லாம் நினைத்து, ஒவ்வொரு பாத்திரத்தையும் மனதுக்குள் வேறுவடிவத்தில் காண முயன்றேன். படத்தில் காண முடியாத நல்ல அம்சங்களை யெல்லாம் மனக்கண்ணில் பார்த்தேன்!

"கண்ணப்பன் ஒப்பதோர்
அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில்
என்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை
வாவென்ற வான்கருணைச்
சுண்ணப் பொன்னீற்றற்கே
சென்றூதாய் கோத்தும்பீ"

என்று மணிவாசகப் பெருமான் உள்ளம் உருகி, ஊன் உருகிப் பாடியிருக்கிறார். கருணை என் பதைக் கனவிலும் அறியாத கிராத குலத்தில்

தோன்றிக் கண்ணுதற் பெருமானுக்குத் தன் கண்ணைப் பெயர்த்து அளித்த கண்ணப்பனின் வரலாறு கன்னித் தமிழகத்தின் பழங் கதை. பெரிய புராணத்தில் சேக்கிழார் பெருமான், கண்ணப்ப நாயனார் புராணத்தைப் பக்திச் சுவை கனி சொட்டச் சொட்ட, அற்புதமாக இயற்றியிருக்கிறார். சைவமும் தமிழும் வழங்கும் இடங்களிலெல்லாம் கண்ணப்பன் கதையும் வழங்கும். பிள்ளைப் பிராயத்தில் திண்ணன் என்ற பெயரோடு வளர்ந்து, பிறகு பிறை சூடிய பெருமான்பால் பிரியா நேயம் பூண்டு அக் கள்ளமிலா உள்ளன்பு காரணமாக, கண்ணப்பன் என்ற சிறப்புப் பெயர் பெற்ற மகா பக்த சிரோமணியின் கதையைப் படமாக எடுக்கத் தொடங்கியவர்கள், பெரிய புராணத்தை ஆதாரமாகக் கொள்ளாதது ஆச்சரியமா யிருக்கிறது. மூலக் கதைக்கு இழுக்கு கற்பிக்கும் முறையில் படம் தயாரிக்கப் பட்டிருப்பதன் காரணம் புலனாகவில்லை. ஒருவேளை கண்ணப்பன் செய்த பாபமோ, அல்லது தமிழன் செய்த பாபமோ!

இந்தப் படத்தில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய நடிகை பண்டரிபாய்தான். மணம் இல்லாத காகிதப் பூக்களிடையே ஒரு குண்டு மல்லிகை மலரைக் கோத்து வைத்தாற் போலவும், போலி வைரக் கற்களிடையே ஒரு 'புளுஜாகர்' வைரத்தைப் பதித்து வைத்தாற் போலவும் பண்டரிபாய், தம்முடைய தெளிவான பேச்சு, இயல்பான நடிப்பு, சந்தர்ப்பத்துக்கு ஏற்ற முகபாவம் முதலியவற்றினால் தனியே ஒளி விடுகிறார்.

காளத்திதான், கண்ணப்பன் கறை மிடற்று அண்ணல் பால் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிக் கரைந்து போன திவ்ய ஸ்தலம். அந்த ஸ்தலத்தின் மகிமையைப் பற்றி இப் படத்திலேதுவும் கூறப் படவில்லை; பின்னணிக் காட்சியாகக் கூட அவ்வூர் இடம் பெறவில்லை. அதற்குப் பதிலாக, கோவில் குருக்களின் அர்த்தமற்ற அசட்டுக் கதை அனாவசியமாக அளவுக்கு மீறி இடம் பெற்றிருக்கிறது. கசித்துப் போன பழைய விஷயங்களான கோவில் தாசி குருக்களை மயக்கிப் படுகுழியில் வீழ்த்துவது திரைக் கதையில் ஏனோ இடம் பெற்றிருக்கிறது. கோவில் குருக்களும் அவர் மகனும் சந்தித்துப் பேசும் போதெல்லாம் நமக்கு அநுதாபமும் ஆத்திரமும் உண்டாகின்றன. கோவில் குருக்கள் வில்லனாக மாறிக் கண்ணப்பனிடம் எரிந்து விழுந்து, ஊர்ப் பொதுமக்களைக் கூட்டம் கூட்டி, கோவிலை அசுத்தப் படுத்தியதற்காக அவனுக்குத் தண்டனை வாங்கி வைக்கிறார். பெரிய புராணத்தில் கோவில் குருக்களுக்கு இத்தகைய கொடிய உருவம் கொடுக்கப்படவில்லை. களங்கமற்ற கடவுள் பக்தனாகிய கண்ணப்பனுக்கும் பக்தியின் பெருமையை யறியாத குருக்களுக்கும் இடையே பல நிகழ்ச்சிகளைப் புகுத்தி, திரைப்படத்தைத் திக்குமுக்காடச் செய்து விட்டார்கள்.

மேற்கூறிய நிகழ்ச்சிகளுக்கும் கண்ணப்பனுக்கும் என்ன சம்பந்தம் என்பது அருட்பெரும் சோதிக்குத்தான் வெளிச்சம்!

தமிழனுக்கு இப்பொழுது நல்ல காலம். அவன் சிந்திக்கத் தொடங்கி யிருக்கிறான். தமிழர் பண்பாட்டுக்கு ஒவ்வாத படத்துக்குத் தன் ஆதரவைத் துளியும் தருவதில்லை; தரம் குறைந்த படங்களுக்குத் தன் ஆதரவை விட்டி லிருந்தபடியே அளிக்கிறான்! அதாவது, அந்தப் படத்துக்குப் போகாமல், தியேட்டரில் கிடக்கும் வெற்று நாற்காலிகள் மூலம் மௌனமாகத் தன் அபிப்பிராயத்தைப் படாதிபதிக்குப் புரிய வைக்கிறான்! ஆகவே, இனியும் படாதிபதிகள் தங்கள் இஷ்டத்துக்குப் படம் எடுத்துத் தமிழ் மக்கள் தலையில் கட்ட முடியாது. திரைப்பட உத்திகளையும், கலை நுணுக்க அம்சங்களையும் படம் பார்க்கும் ரஸிகர்கள் நன்றாய் அறிந்து வைத்திருக்கிறார்கள். திரைப்பட ரஸிகர்களின் தரத்தையும் திறமையையும் மனத்திற் கொண்டு எடுக்கப்படும் பண்பும் பயனும் வழுவாத படங்கள்தான் வருங் காலத்தில் நம் தமிழ் நாட்டின் வெள்ளித் திரையில் பெயர் சொல்ல முடியும்.



# தேவியின் கடிதம்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சகோதரி சுஜாதா,

என்னுடைய ஆப்த சிநேகிதி மங்களாவைத்தான் உனக்குத் தெரியுமே. சில மாதங்களாக அவளைச் சந்திக்க வில்லை. இரண்டு நாட்களுக்கு முன் ஒரு பொது இடத்தில் அந்தச் சகோதரியைப் பார்த்ததும் எனக்கு ஆச்சரியமும், கலவரமுமாய் விட்டது. எப்பொழுதும் உற்சாகமாக இருக்கக் கூடியவள் பத்து வருஷங்கள் அதிகமான தோற்றத்துடன் உருக்குலைந்து காணப்பட்டாள். கண்களில் கண்ணீர் ததும்ப நின்றதைக் கண்டு பயந்து விட்டேன். அந்தச் சகோதரியின் குடும்ப சுகத்தை மெதுவாக விசாரித்ததில் விஷயம் விளங்கியது. பெண் மைதிலிக்கு இந்த வருஷம் கல்யாணம் நடைபெறா விட்டால் என்ன செய்வது என்று துக்கத்துடன் சொன்னாள்.



என்னை அறியாமல் சிரித்து விட்டேன். "பெண்ணுக்குக் கல்யாணம் நடக்கா விட்டால் இப்படி வருந்தி ஆரோக்கியம் கெடுமளவில் மனசை வருத்திக் கொள்வார்களா? இந்த வருஷம் இல்லா விட்டால் அடுத்த வருஷம் ஆகிறது" என்றேன். என் சிரிப்பு அச் சகோதரியின் ஆத்திரத்தைக் கிளப்பி விட்டது. "உனக்கு இப்பொழுது தெரியுமா? உன் பெண் கல்யாண காலத்தில் தான் என் மனக்கஷ்டம் உனக்குப் புரியும்" என்று சபிக்கும் முறையில் ஆரம்பித்தாள். சிநேகிதியை ஒரு விதமாகச் சமாதானப் படுத்தினேன்.

பெண்ணுக்கு வரன் அமைய வில்லையே யென்று கல்லூரியில் படிக்க வைத்தால் மாப்பிள்ளை தேடும் படலம் மூன்று வருஷங்களானாலும் முடிவதில்லை. அதற்குள் பெண் குழந்தைகள் (ஆண்பிள்ளைகளை விட நன்றாகப் படிக்கிறார்கள்) படித்துப் பட்டம் பெற்று விடுகிறார்கள். அத்துடன் வயதும் ஏறிவிடுகிறது. படித்த பெண்களுக்குச் சம நிலையிலோ மேலாகவோ படித்த பிள்ளைகளாகத் தேட வேண்டியதாகி விடுகிறது. படித்தவனாகக் கிடைத்து விட்டால் இதர விஷயங்களில் ஒத்துக் கொள்ள வில்லை. இப்படியாக மங்களாவின் பெண் கல்யாண காலம் ஓடிவிட்டதென அறிந்தேன்.

ஒவ்வொரு பெற்றோரும் திட்டம் போட்டுப் பரஸ்பரம் வெளிப்படையாகப் பேசினால் இவ்வளவு சிக்கல் வராது. தவிர, தன் பெண்ணுக்கு ஏற்ற கணவன் உத்தியோகம் செய்பவனா, அல்லது அதிக அழகுள்ளவனா, குணமுள்ளவனா, உத்தியோகத்தில் மேரு மலையில் இருப்பவனா என்று ஏதாவது ஒன்றைத் தீர்மானித்துக் கொண்டு, மற்றக் குண நலங்களுடையவர்களை விட்டுக்கொடுத்தால் கவலையின்றி மணம் முடிந்து விடுமென மங்களாவுக்கு யுக்தி சொன்னேன்.

அது அவளுக்கு யுக்தமாகத் தோன்றாதது மட்டுமல்ல; குற்றமாகத் தோன்றி விட்டது. 'நன்றாகச் சொன்னாய். நான் என்ன பிரமாதமாகப் பணத்தைத் தேடுகிறேனா? பெரிய பெரிய உத்தியோகத்தைக் கேட்கிறேனா? ஏதோ நமக்குத் தகுந்தபடி எல்லாவற்றிலும் கொஞ்சம் பொருத்தம் வேண்டாமா? ஜாதகப் பொருத்தம் இல்லாமல் தான் செய்ய முடியுமா?" என்று பொரிந்து கொட்டினாள்!

ஜாதகம் பார்ப்பது என்பதில் எவ்வளவு பாதகம் இருக்கிறதோ அவ்வளவு சாதகம் இருக்கிறது. மனப்பொருத்தம் இருந்து ஜாதகம் பொருந்தவில்லையென ஜோஸ்யர் சொல்லி விட்டால் ஜாதகத்தின்மேல் கோபம் வருகிறது. ஆனால் ஒரு வரனைப் பார்த்து அது நமக்குச் சரியாக இராதெனக் கருதினால், அதை வெளிப்படையாகச் சொல்ல முடியாமல் தப்புவதற்கு 'ஜாதகம் சரியாயில்லை. நான் உங்கள் வீட்டுச் சம்பந்தம் செய்து கொள்ளக் கொடுத்து வைக்கவில்லை' யென்று சொல்லி விடலாம்.

தென்னிந்தியாவைத் தவிர இந்தியாவின் வேறு எந்தப் பகுதியிலும் கல்யாணங்களில் ஜாதகம் பார்க்கும் வழக்கமில்லை யென அறிகிறேன்.

ஒருவருக் கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடன் செலவையும் குறைத்துக் கொண்டு நேருக்கு நேர் பேசிக் கல்யாணங்களை அழகாகச் செய்வது என்று முன் வந்தால், மணமக்களும் மகிழ்வார்கள்.

ஜான்ஸியில் கல்யாணங்கள் வெகு சுலபமாக முடிந்து விடுகின்றன வென்றும், அவர்கள் மனப் பொருத்தத்தைத்தான் பிரதானமாகக் கருதுகிறார்களென்றும் அங்கிருந்து வந்த சகோதரி தெரிவித்தார்.

கல்யாணம் செய்யும் முறைகளை அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன். —பூமாதேவி

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 25

ஆண்டவனைத் தியானித்துக் கொஞ்ச நேரமாவது பிரார்த்தனையில் செலுத்துவது மிக அவசியம். நம்முடைய வாழ்நாளை நல்ல வழியில் பயன்படுத்த வேண்டுமானால் உள்ளத்தில் குழப்பமில்லாமல் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால்தான் நம்மைச் சுற்றியுள்ள மக்களுக்கு நாம் பயன்படுவோம். பிறருக்குப் பயன்படுவதற்காகவே அல்லவா நாம் பிறந்திருப்பது. மனிதன் உள்ளத்தில் எப்போதும் ஒரு போராட்டம் நடந்துகொண்டேயிருக்கிறது. அறிவும் அறியாமையும் இவற்றுக்கிடையில் எப்போதும் மனத்தில் போர் நடந்து கொண்டேயிருக்கிறது. அந்தப் போரில் அறியாமையானது தோற்று அறிவு வெற்றி பெற வேண்டுமானால் தியானமும் பிரார்த்தனையும் அவசியம். ஆண்டவனை தியானித்துப் பிரார்த்தனை செய்வோருடைய உள்ளம் குழப்பம் இல்லாமல், வெறுப்பும் துவேஷமும் இல்லாமல், சாந்தி நிலையில் இருக்கும். உள்ளத்தில் ஆண்டவன் நினைவு இல்லாமல் உலக வியாபாரத்தில் கலந்துகொண்டு வேலை செய்கிறவனுக்கு சாந்தம் இராது. துயரப்படுவான். மற்றவர்களுக்கும் துயரம் தருவான். உடலை நீத்த பின் நம்முடைய கதி என்ன என்பது ஒரு புறம் இருக்க, உலக வாழ்க்கைக்கே பிரார்த்தனை வழக்கம் மிகப் பயன்படும். தினசரி வாழ்க்கையில் ஏற்படும் குழப்பங்களும் துயரங்களும் அடங்கி, உள்ளத்தில் அமைதி உண்டாவதற்குப் பிரார்த்தனையை விட வேறு வழியில்லை. இந்த உண்மையை உணர்ந்து கவனித்துப் பார்த்தோமானால் மற்றச் சிக்கல்கள் தாமாக விடுபடும். வாழ்க்கைச் சிக்கல்கள், அநேகம் இருந்தாலும், முக்கியமான இந்த ஒரு முறையைக் கடைப் பிடித்தால் போதும். ஒன்றன்பின் ஒன்றாகச் சிக்கல்கள் தீரும்.

ஆனபடியால் தினசரி எந்தக்காரியம் செய்வதற்கு முன்னும் பிரார்த்தனை செலுத்த வேண்டும். பிரார்த்தனையில் முழு உள்ளத்தையும் செலுத்த வேண்டும். உள்ளம் உருகி ஆண்டவனைத் தியானிக்க வேண்டும். அப்படிச் செய்தாலே தான் காலையில் செய்த பிரார்த்தனை இரவு வரையில் உள்ளத்தில் நிற்கும். பகலில் செய்யும் வேலை முடிந்து தூங்கப் போகும் சமயம் மறுபடி ஆண்டவனைத் தியானித்து அமைதி அடைய வேண்டும். அப்படிச் செய்தால் இரவில் கெட்ட கனவுகள் இல்லாமல் தூங்குவோம்.

எந்தச் சொற்களை வைத்து எந்த முறையில் பிரார்த்தனை செய்வது என்பதைப் பற்றிக் கலவரப்பட வேண்டாம். எந்த வடிவத்திலாவது அமைத்து ஆண்டவனோடு கலந்து சம்பாஷிக்கலாம். அதற்கு வேண்டிய சொற்களையும் முறையையும் அவனவன் தேடிக் கொள்ள வேண்டும். ஒன்றே ஒன்று கவனிக்க வேண்டும். பிரார்த்தனை மொழிகள் வாயினின்று வெளிப்படும்போது, உள்ளம் வேறு இடத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும்படி விடலாகாது.

மக்களுக்குப் பயன்படும் வழியில் வாழவேண்டும் என்று நினைப்பவர்கள் ஒழுங்கும் கட்டுப்பாடும் வைத்துக் கொள்ளா விட்டால் சிதறித்தான் போவார்கள். உலகம் சந்திர சூரிய நக்ஷத்திரங்கள் உள்பட, ஒழுங்கு முறைக்குக் கட்டுப்பட்டு நடக்கிறது. ஒழுங்கில்லையேல், பிரபஞ்சம் ஒரு விநாடி நிற்காது. கலைந்து போகும். தனி மனிதன் தன்னைத் தானே பிரார்த்தனையின் மூலம் கட்டுப்படுத்திக் கொண்டு வாழ்க்கை நடத்தினால் பிறருக்குப் பயன்படுவான். நமக்கும் மிருகங்களுக்கும் உள்ள வித்தியாசம் இதுவே. தியானமும் பிரார்த்தனையும் வேண்டாம் என்று சொன்னால், நாலு கால் பிராணியே ஆய்விடுவோம். மனித சொரூபத்தை நிறுத்திக் கொள்ள வேண்டுமானால் அடக்கமும் தியானமும் பிரார்த்தனையும் யாருடைய நிர்ப்பந்தமும் இன்றி நாமே மேற்கொள்ள வேண்டும்.

[யங் இந்தியா 23—1—30]



# சர்வர் ஐயாத்துரை

சுசீ

அன்பும் ஆதரவும் தந்த அண்ணாச்சி!

பல கோடி வணக்கம். கொடுக்கக் கொடுக்கக் குறையாத பொருள் இது ஒன்றுதானே. வாழ்க்கையில் வசதி பெருகும்போது, உழைக்காமலே அதிகமாகவும் சம்பாதிக்க முடிகிறது என்பது என் அனுபவம். வந்தபோது பல வேலைகள் செய்தேன். வர வர எனக்கு உத்தியோகம் உயர்ந்து விட்டது. லாட்ஜின் பகுதியில் தங்குவோரைக் கண்காணித்து, அவர்கள் திருப்தி யடையும்படி நடந்தால் போதும். இதிலே இனாம் கிடைக்கிறது. இனாம் வாங்குவது தவறு என்று நினைத்தாலும் அதை வாங்காது விடுவதே தவறு என்கிறார்கள், உடன் இருக்கும் சிப்பந்திகள். நான், இன்று மறுத்தால் நாளை வரப்போகும் வாடிக்கைக்காரர்கள் இரக்க சித்தமே இல்லாதவர்களாய் வருவார்கள் என்றும் சொல்லுகிறார்கள். முதலாளியும் இந்த இனாம் வாங்குவதற்கு அனுமதி தருகிறார். இதனால் வேலையும் குறைவு. பண வருவாயும் அதிகம்.

தங்கும் அன்பர்கள், உணவை விட உபசாரத்தையும் குறிப்பறிந்து நடப்பதையும் பாராட்டுகிறார்கள். இதனால் மனத் தத்துவம் அறிந்தவர்களே மேலே, மேலே மாடிக்குப் போக முடியும். நானும் இந்தப் பதவிக்கு வந்திருக்கிறேன். ஆனால், அண்ணாச்சி! தான் வாழும் உலகத்தைவிட, தான் விரும்பும் உலகம், உருவாக்கும் உலகத்தையே என் மனம் விரும்புகிறது. சில மாதங்களுக்கு முன் இதற்குள் வரும்போது, உணவும் முழுத் துணியும் போதும் என்று எண்ணிய மனம் என்னை எங்கெங்கோ இழுத்துச் செல்கிறது.

சுருக்கமாகச் சொல்கிறேன். இந்த மங்களாம்பிகா பவன் போன்ற ஒரு ஸ்தாபனத்தை நான் ஆட்சி செய்ய விரும்புகிறேன். இது ஒன்றும் புதிய கனவாக என் சக-தொழிலாளிகளுக்குத் தோன்றவில்லை. ஒவ்வொருவர் மனத்துள்ளும், சினிமா நட்சத்திரத்துக்கு அடுத்தபடியாக, இதே எண்ணம் விசுவரூபமாக இருக்கிறதை அறிகிறேன். பல நாள் வாசகன், ஒரு நாள் எழுத்தாளன் ஆகிறான் என்று உண்மையைச் சொன்னால், இதே போன்று சர்வர்கள் முதலாளிகள் ஆக ஆசைப்படுகிறார்கள். தான் முன்னுக்கு வர எண்ணுவதால்தான் உலகமே உத்சாகமாக இருக்கிறது. உயரிய நிலையையடைய எண்ணாதவர் யார்! என் முதலாளி கூட என் போல உழைத்து முன்னுக்கு வந்தவர் என்று அறியும்போது எனக்குள்ள நம்பிக்கை இன்னும் வலுவடைகிறது.

என் ஆசைக் கனவுகள் இருக்கட்டும். அது தளிர்விடும் போது தளிர்விட்டே தீரும். மேலே மாடியில் மேற்பார்வையாளனாக இருக்கும் போது, ஓட்டலில் கீழே நடக்கும் களாபுளாக்கள், குழப்பங்கள் எதுவுமே தெரியவில்லை. பச்சைக் காய்கறிகள் அழுகல் நாற்றம், முருகிச் சிவந்த எண்ணெயின் முறுகல் நெடி, ஆட்டுக்கல்லின் ஓட்ட ஓசை வெள்ளம், வாடிக்கைக்காரர்களின் தொல்லை, ஈரத் தரையின் பிசுப் பிசுப்பு, இன்னோரன்ன இல்லாத புதிய உலகத்தில் நடமாடும் போது, வானத்து வாழ்க்கை இது என்ற பிரமை ஏற்படுகிறது. சலவைக் கற்கள் பாவிய இடத்தில் மும்தாஜ் சடலம் இருக்கிறது என்று சரித்திரம் சொல்லும். நான் இங்கே வாழும் வாழ்க்கை, இதன் சுக சௌகரியங்கள் அத்தனையும் எனக்காகவே செய்யப்பட்டவை; இந்த எண்ணத்தையே, தங்க வருகிறவர்கள் எண்ண வேண்டும்; இந்தத் தங்குமிடம், தனக்காகவே கட்டப்பட்டது, தன்னைத் தவிர வேறு எவரையும் கவனிக்க மாட்டார்கள் என்று ஒவ்வொரு வாடிக்கைதாரும் எண்ணி விட்டால், முதலாளி பணத்தை எண்ணிக்கொண்டே இருக்கலாம்.

நான் பணத்தை எண்ணிக் கொண்டிருக்க, என்றாவது எனக்கும் நல்ல சர்வர்கள் பலர் கிடைப்பார்கள், அவர்கள் என்னைப் போல இன்முகத்தோடு வரவேற்று உபசரித்தால்! எனக்கு மட்டும் அல்ல, என்னிடம் வேலை பார்க்க இருக்கும் அந்த சர்வர்களும் ஒரு நாள் என்னைப் போல ஆகலாம்! அப்பப்பா! இந்த மனம் காலத்தைக் கடக்க வல்லது. நான் வேலைக்காரனாக இருக்கும் போதே, என்னிடம் வேலைக்கு வரப்போகும் வேலையாளைப்பற்றித் திட்டம் உருவாக்குகிறது. அண்ணாச்சி! நான் மானசீக முதலாளியாக மாறி விட்டேன் என்றால் நான் அனுபவிக்கும் சுகங்கள் அதிகம் என்று தெரிகிறது.

என் மனத்துள்ளே முதலாளி ஆசை மட்டும் புகுந்து கொண்டதாக எண்ணிவிடக் கூடாது. எனக்குள்ள பெரிய ஆசை உலகத்திலே உள்ள தித்திப்புகள், காரங்கள், பலகார வகைகள், தயிரோதனங்கள், சட்னி முறைகள், சாம்பார் இனங்கள் அத்தனையும் என்னுடைய கையால் செய்து தீர்க்க வேண்டும். அதற்குத் துணையாக எனக்கொரு குரு கிடைக்க வேண்டும் என்றும் எண்ணுகிறேன். மாபெரும் நல்ல ஆசையோடு, ஒரு சிறிய தவறான ஆசையும் உடன் கிளைக்கிறது. அதாவது போலிப் பொருள்கள் கிடைத்தாலும் நிஜப் பொருள் போன்ற ருசியைத் தரவேண்டும் என்பது அந்த ஆசையாகும்.



மைசூர் போண்டாவில் மைசூர் இல்லாமலும் பம்பாய் சட்னியில் பம்பாய் இல்லாமலும் செய்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால் உருளைக் கிழங்கு போண்டாவில் உருளைக் கிழங்கு இல்லாமலே செய்ய முடியும் என்பது உங்களுக்குத் தெரியாது. ஆனால் சாப்பிடும் போது உருளைக்கிழங்கு சாப்பிடுகிற திருப்தி, உணர்ச்சியை நீங்கள் பெறுவீர்கள். காலிபிளவர் கூட்டு என்று வெளியே பலகையில் விளம்பரம் இருக்கும். சாப்பிடுகிறவரும் காலிபிளவர் நிறம், உருவம் ருசியுள்ள பண்டத்தைத் தின்பார். ஆனால் காலிபிளவர் மட்டும், கறிக்கு உபயோகம் ஆகியிருக்காது. விலை தூக்கலான தினங்களில் வேறு எந்தப்பொருளை உபயோகம் செய்தால், நிஜப் பொருளின் ருசியும் உருவமும் கொடுக்க முடியும் என்பதுதான் சமையல் கலையின் வெற்றியாம். இச் சூட்சமத்தை எனது இளம் உள்ளம் அறிய ஆசைப்படுகிறது. மார்க்கட்டில் விலை விசாரித்தால் அந்தக் காய்கறியை இன்னும் ஒரு வருஷத்துக்கு வாங்க முடியாதவர்கள், ஓட்டலில் நிறையச் சாப்பிடுவார்கள். ஓட்டல்காரருக்கு எவ்வாறு கட்டுகிறது என்று யோசித்தால் அல்லவா தெரியும்! யாருக்கு அன்னுச்சி யோசனை வருகிறது!

அன்றாடம் சாப்பிட வருகிறவர்கள், உணவு பற்றிய குறைகள் நலன்கள் அறிந்திருக்கிறார்கள்; மாதச் சாப்பாட்டுக்காரர்கள் உணவை யள்ளிப் போட்டுக் கொள்வது, என்ஜினுக்குக் கரி போடுவது போல என்றுணர்கிறார்கள்; அதனால் மகிழ்ச்சி படைவதில்லை. கொள்ளும் புல்லும் தின்ற குதிரை கனைத்துச் சந்தோஷம் காட்டும். பெட்ரோல் உண்ட மோட்டார் கத்தித் தன் சந்தோஷத்தைச் சொல்லுமா! மாதச் சாப்பாட்டுக்காரர்கள் பெட்ரோல் உண்ட மோட்டார்மாதிரி போய்விடுவார்கள். அன்றாடம் அந்தி பூத்தாற்போல ஒரு சிலர் சுவைத்துச் சாப்பிடுவது ஓட்டலுக்கு விளம்பரப் பலகையாம். அவர்கள் புகழே கூட்டம் தேடித் தருமாம். ஆனால் தங்குவதற்கு வருகிறவர்கள் உணவை ரசிப்பதே அருமை. அவர்கள் வந்த காரியம் அவர்களுக்குக் குறி. கவலையோ சந்தோஷமோ கொள்ளுவார்கள்; உணவு அவர்களுக்கு இடைவேளைக் காட்சி. ஆனால், இவ்வாறு தங்கும் ஆத்மாக்கள் ஆரம்பத்தில் சூரத்தனமாக இருப்பார்கள். ஒரு தினம் அல்லது ஒருபொழுது போய் விட்டால் தங்களுக்குத் தட்டெடுத்து வரும் ஆள் — ஒரு மனிதன், அவனுக்குக் காது உண்டு, அவன் மனித உணர்ச்சியுள்ள யந்திரம் என்று அறிய மாட்டார்கள்.

தங்குமிடத்தில் வேலை செய்கிறவன் சினிமா பார்க்க வேண்டாம். வீதி மூலையில் நின்று வேடிக்கை பார்க்க வேண்டாம். ரேடியோ கேட்பதோ, பத்திரிகை படிப்பதோ அனாவசியம். இத்தனையும் அங்கங்கே அறைகளில் அவன் காணலாம்; கேட்கலாம். ஆனால் கேட்டதாகக் கண்டதாக வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளக் கூடாது. இங்கே வந்து தங்குபவர்கள் வக்கீல்கள்; அவர்களுக்கு அடுத்த அறையில் குற்றவாளிகள்; சினிமா நடிகர்கள்; அவர்கள் அருகே பிரம்மச்சாரிகளான யாத்திரிகர்கள் தங்குவார்கள். உலகத்திலே உன்ன ரசமான மக்களின் பேச்சுக்கள் ஓட்டலில் நிகழ்கின்றன. நான் மட்டும் ஒரு எழுத்தாளனாக இருந்தால், நாளொரு நாவல் வீதம், குறிப்புச் சேகரம் செய்யலாம். சிறுகதைகள் பல பலிதமாகக் கிடைக்கும். கட்டுரைகள் கணக்கற்றவை. அனுபவம் ஆனந்தம் இரண்டும் சொற்பச் செலவிலே பெறக்கூடிய இடம் ஓட்டலில் தங்கும் அறைகள். என் போன்ற சர்வர்கள் பணத்தையும் பெற்றுக் கொண்டே, உலகத்தின் வேடிக்கை வித்தியாசங்களைக் கவனிக்கிறோம். கொடுத்து வைத்த புண்ணியவான்கள் என்று சொன்னாலும் சரி. அல்லது உங்கள் இஷ்டப்படியே எது சொன்னாலும் சரி.

இனி என் வேலையில் முன்னேற்றம் வேண்டும் என்றால் இங்கிருந்து வேறு இடங்களில் சமையல் உலகம், சாப்பாட்டு உலகம் எப்படி இருக்கிறது என்று பார்க்கவேண்டும். அல்லது,



செய்ததைப் பரிமாறுவதைவிட, நானே உழைக்கும் சமையல் அறையை அடைக்கலம் அடைய வேண்டும். இதுதான் என் வாழ்க்கையை வளம்படுத்தும். உணவைப் பரிமாறுவது மிகவும் சுலபமான தொழில்; சமையல் செய்வதுதான் கலை. நான் கலைஞனாக மாறுவதற்குத் திட்டங்கள் போட்டு வருகிறேன். அண்ணாச்சி, இங்கேதான் கஷ்டங்கள் வருகின்றன.

சமையல் அறையில் கையாட்களைச் சரியான சமயத்தில் வெளியே போகும்படி ஏவுகிறார்கள். என்ன குறிப்பு எத்தனை விகிதம் என்று அறிந்துகொள்ளக் கூடாதாம். மணம் வரும், ருசி வரும் பக்குவங்களைத் துணைநிற்கும் கையாள் அறியாமல் எட்டுச் சமையல்காரரும் சரி, பட்சண பிரம்மாவும் சரி சொல்லித் தருவதில்லை. அத்தோடு அதைத் திருட்டுத் தனமாகக்கூட அறியாதபடி கதவை மூடிக்கொள்கிறார்கள். ஐயோ பாவம், தங்கள் பிழைப்புக்கு மண் விழுந்து விடுமே என்ற பயமோ அல்லது அத்தனை சுத்தமான இருதயமோ உள்ளவர்கள். சொல்லித் தெரியாத கலையில் சமையற் கலையும் ஒன்று என்ற முடிவுக்கு வந்து விட்டேன். கைக்குக் கை மணம் எவ்வாறு வருகிறதோ!

அவ்வொருநாள் எழுத்தாளர் ஒருவர், "ஒரே விஷயம், ஒரே நோக்கம். அனாலும் சொல்லும் விதத்தால் நடை வேறுபடுகிறது; ஒரே காய்கறி ஒரே பக்குவம். ஆனால் ருசி மட்டும் வேறு ஆவதைப்போல" என்று சொன்னார். எனக்கு அன்று அது விளங்கவில்லை; இன்றோ சமையல் பற்றிய விவரம் விளங்கவில்லை. ஆனாலும் முயற்சிக்குப் பலன் உண்டு; நான் சமையல் தெரிந்த முதலாளியாக, பட்சணங்கள் போடும் முதலாளியாக, பணம் சம்பாதிக்கும் கலைஞனாக வெல்லாம் ஆகிவிடுவேன் என்பது திண்ணம்.

கவலையை முகத்தில் காட்டாது, எப்போதும் உத்சாகமாக இருக்கும் சிப்பந்திகள் ஓட்டலுக்கு அரண்; அவர்கள் கவலைப்படுவது, தூங்கிவழிந்தாற்போல அலுத்துக்கொள்வது தனிமையில் பிறர் காணு வண்ணம் நடைபெற வேண்டிய சித்துக்கள். யார் திருட்டுத்தனமாக உண்ண வருவார்கள்; ஏமாற்றுவார்கள் என்ற துப்பறியும் திறன் இல்லாது போனால் பாவம் தன் சம்பளத்தைக் கரைத்துக் கொள்ளும் வழியை ஒருவன் ஒப்புக் கொள்ளுகிறான். இல்லாததைக் கேட்டாலும் இருப்பதையே முக மலர்ச்சி அகமலர்ச்சியுடன் புளுகவும் தெரிய வேண்டும். அறைகளில் தங்க வந்தவர்கள் உண்மையை எத்தனை அறிந்தாலும் அறியாதவன் போன்று வேஷம் போட்டுக் கொள்வது சாலச் சிறந்தது. கூடுமானவரை மனத்துக்குள்ளே துவேஷம் இருந்தாலும் முகத்து வரை வராமல் பழக்கிக் கொண்டால், ஓட்டல் விட்டு ஓட்டல் ஓட வேண்டுவதில்லை இந்த மாவிலத்தே.

அண்ணாச்சி! இன்னும் நான் எவ்வளவோ சொல்லிக் கொண்டிருக்கலாம். சொல்லுந் திறன் எல்லாருக்கும் எப்போதும் நீடித்திருப்பதில்லையே.

என் கண்ணிலே பட்ட குறைகள் ஒரு சில உண்டு. அதைத் தற்காலத்தில் யாரும் நிவர்த்தி செய்யாவிட்டாலும், நான் ஆரம்பிக்க இருக்கும் பிரம்மாண்டமான ஓட்டலில் நீங்கள் காண முடியாது.

உதாரணமாகச் செய்யும் அந்தத் திருத்தங்கள் பல. ஒரு சில பாருங்கள். ஒவ்வொரு மேஜையிலும், சர்வர்கள் வந்து பட்சண வகையின் பட்டியல் ஒப்புவிக்க வேண்டியதில்லை. இந்த வாய்ப்பாட்டை அச்சிட்டு வைத்திருப்பேன். காது மந்தமானவர்களுக்குக் காது கேட்கும்படி சிறு பெட்டியில் பலகார, பட்சணங்கள் பட்டியல் காதில் விழும்; அதாவது மேஜைக்கு மேஜை சிறு ஸ்பீக்கர் வசதிகள் இணைப்பேன்.

ஆட்கள் சாப்பிட்டபின்னர் சில்லறை இருக்கிறதா இல்லையா என்ற கஷ்டம் நான் ஆரம்பிக்கும் ஓட்டலில் இருக்காது. உள் பக்கம் ஆள் வரும்போதே புதுசாக எக்ஸ்ரே மூலம், ஆள் வசம் உள்ள பண நிலைமையை அறியக்கூடிய யந்திரம் என் பெட்டியடியில் இருக்கும். ஆசாமியிடம் பணம் உள்ளேயிருப்பது வெளிப்படையாக என் கண்ணில் விழும். இல்லாதவர்கள், உடனடியாக வெளியே அனுப்பி வைக்கப்படுவார்கள்.

'டவரா தம்ளரை எச்சில் செய்யாதீர்கள்' என்ற விளம்பரப் பலகை என் ஓட்டலில் இருக்காது. எச்சில் செய்ததும் ஷாக்—அதிர்ச்சி—தரக்கூடிய டவரா தம்ளர் செட்டுகள் தயார் செய்திருப்பேன்.

நான் நடத்தப் போகும் ஓட்டலில் தங்க வருவோர் குறிப்பிடும் உறவுமுறை பற்றிய மன சாட்சி அறிய ஒரு யந்திரம் இருக்கும். அவர்கள் உள்ளதைத்தான் குறிக்க முடியும்.

இன்னும் சொல்லப் போனால், நான் ஆரம்பிக்கும் ஓட்டல் உலகத்திலேயே பண்பும் பயனும் உடையதாக இருக்கும் என்று உறுதி கூறுகிறேன். இப்போது ஏதோ அறையிலிருந்து கூப்பிடுகிறார்கள்! இதோ போய் வருகிறேன், அண்ணாச்சி. தங்களிடமிருந்து விடை பெற்றுக் கொள்கிறேன். சர்வர் ஐயாத்துரை

எங்கள் 40 குச்சி கோபுரம் மார்க்
சிம்கோ ஷீல்ட் மார்க், சிம்கோ
சைகிள் மார்க், மைனர் சைஸ் சிறு
லேடி மார்க், 60 குச்சி வேட்டை
சிங்கம் மார்க் தீப்பெட்டிகள்



கடற்கரை குளிர்ப் பிரதேசங்களுக்கும்
மற்றும் மலபார் மழைக்கும் உகந்தது

சிறந்த சரக்கு உற்பத்தி! சிறப்பான பொதுஜன ஆதரவு!!

தினம் குடிசைத் தொழிலாகத் தயாராகும்
3,800 குரோஸ் தீப்பெட்டிகளும் எங்களுடைய
டெப்போக்களிலேயே செலவாகி வருகின்றன






**சிம்கோ, சிவகாசி. S.I. போன். 63. தந்தி. SIMCO**

கோடைகாலத்தில் நீலகிரியின்
குளுமையை உங்கள்
வாசஸ்தலத்திலேயே அடையுங்கள்





# டி.எஸ்.ஆர்

சந்தனாதி, அரைக்கீரை விதை
பிருங்காமலகா தைலங்கள்.



**டி.எஸ்.ஆர் & கோ. கும்பகோணம்.**

சென்னை [illegible] : [illegible], 18, ராயப்பேட்டை ஹைரோடு ○ கோயமுத்தூர், பாலக்காடு. [illegible]: R. [illegible], (ஸ்தாபிதம் 1932), [illegible] தெரு, கோயமுத்தூர் கல்கத்தாவில் கிடைக்குமிடம்: [illegible], 179/1, [illegible] ரோடு, கல்கத்தா - 28

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

### *தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு*



இந்த பரத நாட்டியக்காரியைப்போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண கால நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம். மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால் குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட




கால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்

# அமர தாரா

## அத்தியாயம் 14

## பட்டு ரோஜா

புதுப் புடவையின் சரசர வென்ற ஒலியிலிருந்து அது சுலோசனாவாகத் தான் இருக்க வேண்டுமென்று நினைத்தேன். அத்தரின் மணம் கும்மென்று அறை முழுவதும் பரவியது. நான் அசையவில்லை. சோபாவில் சாய்ந்த வண்ணம் சுவரையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

திடீரென்று என் முன்னால் ஒரு கொத்து ரோஜாப் புஷ்பங்களை நீட்டினாள் சுலோசனா. கருஞ் சிவப்பு நிறமுடைய பட்டு ரோஜாக்களும், இளம் மஞ்சள் நிறமுடைய ரோஜாக்களுமாக அந்தக் கொத்து மிக அழகாக இருந்தது. நான் புஷ்பங்களையே அசையாமல் பார்த்துக்கொண்டிருந்தேன்.

"உங்களுக்கு ரோஜாப் பூக்கள் ரொம்பப் பிரியம் என்று கூறினீர்களே. வாங்கிக் கொள்ள மாட்டீர்களா?" என்று கேட்டாள் சுலோசனா.

எனக்கு என்ன காரணத்தாலோ உணர்ச்சி தொண்டையை அடைத்துக் கொண்டது. என்ன விநோதமானது வாழ்க்கை? இந்தப் பெண் என்னை உண்மையிலேயே நேசிக்கிறாள். எத்தனையோ பேர்களுக்கு மத்தியில் பழகியும் அவளுக்கு என் மீதுதான் அன்பு இருக்கிறது. அது நன்றாகத் தெரிந்தது. சுலோசனா மற்றவர்களிடம் பேசும் போது சிரித்துக் கலகலப்பாகப் பேசுவாள். ஆனால் எங்கோ தொலைவிலிருந்து பேசுவது போல இருக்கும். என்னுடன் பேசும் போது அதிகமாகச் சிரிக்கமாட்டாள். வார்த்தைகளை நிறுத்திப் பேசுவாள். ஆனால் என் அருகில் நெருங்கியிருக்க வேண்டும் என்ற ஆர்வம் அதில் தொனிக்கும்.

சுலோசனாவின் கலகலப்புக்கும், புதிய நாகரிகத்துக்கும் அடியில் ஒரு அடக்கம் இருந்தது. அவளுடைய சுபாவங்களை நான் மனத்துக்குள் மெச்சியபோதிலும் அவளிடம் எனக்கு அன்பு சுரக்கவில்லையே. என் இதயத்தை நான் இந்துமதிக்கு என்றோ கொடுத்து விட்டேனே. அதில் வேறு எதற்கும் இடமே இல்லை. சுலோசனாவின் ரோஜாக்களைக் கண்டு எனக்கு அவளிடம் பரிதாப உணர்ச்சிதான் உண்டாயிற்றே தவிர அன்பு உண்டாகவில்லையே? சுலோசனா என்னிடம் ஒருவித உணர்ச்சி



யையும் வெளிப்படையாகச் சொல்லாமலேயே இருந்தாள். அதனால் அவள் மீது எனக்கு மதிப்பும் மரியாதையும் உண்டாயிற்று. அதற்கு மேல் சிறிது கூட இதயம் கனிந்து உருகவில்லை.

ஆனால் என்னை அலட்சியம் செய்த இந்துவைப் பற்றி நினைத்து நினைத்து ஏங்குகிறேன். அவளுடன் கழித்த நாட்களைப் பற்றி எண்ணிப் பெருமூச்சு விடுகிறேன். ஒரு காலத்தில் பூரண சந்திரனின் தண்மையான கதிர்களைப் போல் என் இதயத்தைக் குளிர்வித்த அவளுடைய பெயரை நினைக்கும்போதே நெஞ்சம் வெதும்புகிறது.

சுலோசனாவுக்குப் பொறுமை போய் விட்டது. ரோஜாப் பூக் கொத்தை மேஜை மீது வைத்தாள். பிறகு உள்ளே சென்று ஒரு கிண்ணம் எடுத்துக் கொண்டு வந்து பூக்களை அதில் அடுக்கி விட்டு மறுபடியும் வைத்தாள்.

பிறகு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஏக்கம் தொனிக்கும் குரலில், "என்னிடம் பேச மாட்டீர்களா? நான் எவ்வளவு ஆசையாக இந்த ரோஜாப் புஷ்பங்களைக் கொண்டு வந்தேன். ஒரு வேளை சீமையில் பார்த்த மாதிரி இவை அவ்வளவு அழகாக இல்லைபோலிருக்கிறது" என்றாள்.

"ரொம்ப அழகாக இருக்கிறது, சுலோசனா! மலர்கள் இயற்கை அன்னையின் தெய்வீகமான அழகு பொருந்திய குழந்தைகள் அல்லவா?"

"பின் ஏன் இப்படிப் பறிகொடுத்த மாதிரி இருக்கிறீர்கள்? முன்பெல்லாமாவது சில சமயங்களில் உங்கள் முகம் பிரகாசமாகத் தெளிவுடன் இருக்கும். இப்போதெல்லாம் எப்போதும்..."

"அழுது வடிகிறதாக்கும்."

"இல்லை. சோகம் ததும்புகிறது!"

நான் சிரித்தேன். என் சிரிப்பு எனக்கே விநோதமாக இருந்தது. நான் சிரித்து அவ்வளவு நாட்களாகி விட்டன.

"இந்தச் சிரிப்பிலும் உற்சாகம் இல்லையே மிஸ்டர் ராய்! உங்கள் சக்தியெல்லாம் எங்கே போயிற்று? உங்கள் முகமலர்ச்சி எப்படி மறைந்தது? சீமையிலிருந்து வந்தவுடன் நீங்கள் புது மலரைப் போல இருந்தீர்களே? இப்போது என்ன ஆகிவிட்டது? என்னிடம் சொல்ல மாட்டீர்களா?"

"முக்கியமான காரணம் ஒன்றுமில்லை, சுலோசனா. நீங்கள் தான் சொல்லுங்களேன். எனக்குச் சந்தோஷமாக இருக்க என்ன இருக்கிறது?"

சுலோசனா மேஜைக்கருகில் திரும்பினாள். ரோஜாக் கொத்திலிருந்து ஒரு பெரிய சிவந்த ரோஜா மலரைக் கிள்ளி எடுத்தாள். தன் கழுத்தில் தொங்கிய சங்கிலியிலிருந்து



ஒரு ஊசியை எடுத்து அந்த மலரை அதில் கோத்து என் அருகில் வந்தான்.

சட்டென்று குனிந்து அதை என் சட்டையில் பொருத்தினான். என் நினைப்பு நீங்குவதற்குள், "ஏன் மிஸ்டர் ராய்! உங்களுக்குச் சந்தோஷத்துக்கு என்ன குறை? மகிழ்ச்சியை நீங்கள் வேண்டுமென்றால் அடைய முடியாதா? நீங்களாகவே உங்களைச் சுற்றி முள்வேலியைக் கட்டிக் கொண்டு ஏன் துன்பப்படுகிறீர்கள்?" என்றான்.

அவன் கூற வந்ததைக் கூறவில்லை என்று எனக்கு நன்றாகத் தெரிந்தது. இனிமேலும் அவனிடம் உண்மையைச் சொல்லாமல் இருக்கக் கூடாதென்று உடனே தீர்மானித்தேன். சுலோசனா என்னிடம் எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறாள் என்பதும், அதை வெளிவிடாமலிருக்க அவள் எவ்வளவு கஷ்டப்படுகிறாள் என்பதும் அந்தக் கணத்தில் எனக்குத் தெரிந்து விட்டது.

நான் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டேன். "சுலோசனா! நான் கேட்பதற்கு நீங்கள் பதில் சொல்வீர்களா? உங்கள் மனத்தில் ஏதோ ஒரு எண்ணத்தை வைத்துக் கொண்டு கஷ்டப்படுவதாகத் தோன்றுகிறது..."

"மிஸ்டர் ராய்! அதை நான் சொல்லித்தான் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமா? உங்களுடைய மனத்தில் அதைக் குறித்துச் சந்தேகம்தான் எழுகிறதா? என் இதயத்திலிருந்து எழும் குரல் உங்கள் உள்ளத்தில் எதிரொலிக்கவில்லையா?"

"சுலோசனா! என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். இன்று வரை எனக்கு நிச்சயமாகத் தெரியாததால் நானாகப் பேச்சை ஆரம்பிக்கவில்லை. நான் செய்தது மிகப் பெரிய தவறு. ஆரம்பத்திலேயே உங்களிடம் நான் உண்மையைக் கூறியிருக்க வேண்டும். இவ்வளவு தூரம் அதை முற்ற விட்டு விட்டேனே என்று ரொம்ப வருத்தமாக இருக்கிறது. நீங்கள் இந்தமாதிரி எண்ணத்தை உங்கள் மனத்திலிருந்து அகற்றிவிட வேண்டும். அதற்குக் காரணம் கூறவும் தயாராக இருக்கிறேன்."

"மிஸ்டர், ராய்! நீங்கள் இவ்வாறு கூறுவீர்களென்பதை நான் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். இந்த எண்ணத்தை அடியோடு களைந்துவிட வேண்டுமென்று ஆனமட்டும் முயற்சி செய்தேன். அப்படி அதை நான் கத்திரிக்கக் கத்திரிக்க அது இன்னும் அடர்த்தியாக வளர்ந்தது. ரோஜாச் செடியைக் கத்திரித்தால் நன்றாகத் தழைத்து அதிகமாகப் பூக்கிறது. அந்த மாதிரி என் நிலையும் ஆகி விட்டது. நான்



என்ன செய்ய முடியும்? உங்களுடைய அன்பை நான் பெற முடியாதென்று என் உள்ளத்திலிருந்து ஒரு குரல் கூறிக் கொண்டேதான் இருக்கிறது. இருந்தாலும் அதை மறக்க முடியவில்லை.''

என் உள்ளம் உருகிப் போயிற்று. அந்தச் சமயத்திலும் எனக்கு ஒருவிதமான கர்வம் உண்டாயிற்று. ஒரு பெண் தன்னைக் காதலிப்பதாகக் கூறும்போது ஒரு மனிதனுக்கு ஏற்படும் கர்வத்துக்கு இணையாக வேறு எப்போதும் ஏற்படுவதில்லை. இந்துவின் வார்த்தைகளால் எரிந்து கொண்டிருந்த மனத்துக்குச் சுலோசனாவின் அன்பு இதமாகக் கூட இருந்தது. எனக்கே என் உணர்ச்சி வெட்கத்தை உண்டாக்கிற்று.

நான் சுலோசனாவைப் பார்த்து, ''சுலோ! என்மீதுதான் தவறு. மேலும், உன் அண்ணாவும் அப்பாவும் இதற்குத் தூபம் போட்டு விட்டார்கள். அதுதான் முக்கியமான காரணம்'' என்றேன்.

சுலோசனா என்னை ஏறிட்டுப் பார்த்தாள். அவளுடைய கண்களில் கண்ணீர் ததும்பிக் கீழே சொட்டத் தயாராக இருந்தது. எப்போதும் சிரிப்பும், விளையாட்டுமாய்ச் சிறு குழந்தைபோலிருந்த சுலோசனாவை 'அந்த நிலையில் பார்த்தபோது எனக்கு இரக்க உணர்ச்சி பொங்கிக் கொண்டு வந்தது. அவளுடைய குதூகலத்தைக் குலைப்பதற்கு நானே காரணம் என்று நினைத்தபோது செய்யத் தகாத குற்றத்தைச் செய்து விட்டது போல் மனம் புழுங்கியது.

''நான் உங்களை நேசிப்பதற்கு அவர்கள்தான் காரணம் என்று நினைக்கிறீர்களா? அது எவ்வளவு தவறான எண்ணம் தெரியுமா? உங்களுக்கு முன்னால் நான் பலரிடம் பழகியிருக்கிறேன். என் தந்தையும், ரமேஷும் எனக்குக் கல்யாணம் செய்து வைக்க நான்கு வருஷங்களாக முயன்றுதான் வருகிறார்கள். நான் யாரையும் பிடிக்கவில்லை என்று சொல்லி விட்டேன். ஆனால் உங்களை முதன் முதலில் பார்த்தபோது மட்டும் என் மனத்தில் ஒருவித அதிர்ச்சி ஏற்பட்டது.

''உண்மையைக் கூறுகிறேன் மிஸ்டர் ராய்! யாரைப் பார்த்தாலும் எனக்கு என்னைவிட மட்டமாகத் தோன்றும். யார் முன்னாலும் நான் என்னைக் குறைவாக மதிப்பிட்டுக் கொண்டதேயில்லை. ஆனால் உங்களைப் பார்த்தபோது எனக்கு உங்களிடம் ஒரு மரியாதை ஏற்பட்டது. என்னை விட நீங்கள் உயர்ந்தவரென்ற எண்ணம் தோன்றியது. என்னுடைய கர்வமெல்லாம் உங்கள் முன்னால் பொடிப் பொடியாகச் சிதறிப்போயிற்று. உங்களிடம் என் இதயத்தை அர்ப்பணிப்பதே எனக்குப் பெருமை என்று தோன்றியது. என்னைவிடத் தாழ்ந்தவரென்று நான் கருதும் ஒருவரிடம் எப்படி என் இதயத்தைக் கொடுக்க முடியும்?

''நான் எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். பழகியுமிருக்கிறேன். எத்தனையோ அறிவாளிகளைப் பார்த்தேன். ஆனால் அவர்களுக்கு இதயமே இல்லாமலிருந்தது. நல்ல இதயமுடையவர்களுக்கு அறிவின் வளர்ச்சியே இல்லாமலிருந்தது. உங்கள் ஒருவரிடம் நான் இதயமும், அறிவும் ஒன்றோடொன்று பொருந்தியிருப்பதைக் கண்டேன். அவை இரண்டும் சங்கமமாகும் இடத்திலிருந்து ஒரு அமுத தாரை பாய்ந்து என் இதயத்தில் கலந்தது. அதை நீங்கள் எப்படி அறிவீர்கள்?''

சுலோசனாவின் கண்களிலிருந்து பொங்கிய கண்ணீர் பொல பொலவென்று அவளுடைய புடைவைமீது உதிர்ந்தது.

''சுலோசனா! நீங்கள் முகத்தைத் துடைத்துக் கொள்ளுங்கள். நான் என் இதயத்திலிருப்பதைச் சொல்லி விடுகிறேன். பிறகு உங்கள் மனமும் மாறி விடும்'' என்றேன்.

சுலோசனா கண்களைத் துடைத்துக் கொண்டு பேசத் தொடங்கினாள். ''நீங்கள் என்ன கூறினாலும் என் மனம் மாறாது, மிஸ்டர் ராய். நீங்கள் கூறுவதற்கு முன்பாக நான் கூற வேண்டுமென்று நினைத்ததைக் கூறி முடித்து விடுகிறேன். பிறகு நீங்கள் சொல்வதையெல்லாம் கேட்கிறேன்.

''முதன் முதலில் நாம் ஒரு விருந்தில் சந்தித்தோம். அன்று நீங்கள் என்னிடம் பேசியதும், உங்கள் தோற்றமும் எனக்கு உங்களிடம் ரொம்ப மரியாதையை உண்டாக்கின. இரவெல்லாம் எனக்கு உங்கள் நினைவாகவே இருந்தது. உங்கள் பேச்சில் பணிவு இருந்தது; குழைவு இல்லை. உங்கள்

தோற்றத்தில் கம்பீரம் இருந்தது. கர்வம் இல்லை.

"பிறகு உங்களுடன் நான் நன்றாகப் பழக ஆரம்பித்தேன். என்னை நீங்கள் சகோதரனைவிட நன்கு நடத்தினீர்கள். பிரியமாக இருந்தீர்கள். ஆனால் ஒரு தடவையாவது அதிகமாக ஒரு வார்த்தை பேசியதில்லை. அந்த மன உறுதி எனக்கு வியப்பளித்தது. அந்தப் பாறையைப் போன்ற உறுதிக்குப் பின்னால் மனிதத் தன்மை மிளிர்ந்தது.

"நாளடைவில் நான் உங்களைச் சந்தோஷப்படுத்த வேண்டுமென விரும்பினேன். நீங்கள் அதை உணராமலிருந்த போதெல்லாம் எனக்கு உங்கள் மீது கோபம் உண்டாயிற்று. ரோஜா மலர்கள் நீங்கள் பிடிக்குமென்று கூறியதும், ரோஜாச் செடிகள் வரவழைத்துப் பயிராக்கத் தொடங்கினேன். அது துளிர் விட்ட போது என் மனமும் துளிர்த்தது. அது மொட்டு விடுவதை ஆவலாக எதிர்பார்த்திருந்தேன். முதல் மொட்டு அரும்பியதும் என் மனம் குதூகலித்தது. ஆனால் நாம் உடனே சென்னை சென்று விட்டோம். திரும்பி வந்ததும் அவை நிறைய மொட்டுக் கட்டி விருப்பதைப் பார்த்து ஆனந்தப் பட்டேன். இன்று அவைகளைப் பறிக்கும் போது என்னவெல்லாம் எண்ணினேன் தெரியுமா? 'இந்தச் சிவந்த ரோஜாவோடு என் இருதயத்தையும் உங்களுக்கு அர்ப்பணிக்கிறேன்' என்று கூறவேண்டுமென்று எண்ணினேன்.." சுலோசனாவால் அதற்கு மேல் பேச முடியவில்லை. உணர்ச்சி மிகுதியினால் அவள் விம்மினாள்.

## அத்தியாயம் 15

# சுருதி சேர்ந்தது

சுலோசனாவின் விம்மல்கள் அடங்கும் வரையில் நான் காத்திருந்தேன். பிறகு அவள் உள்ளே சென்று முகத்தைத் தண்ணீரில் கழுவிக் கொண்டு திரும்பி வந்தாள்.

நான் சிறிது நேரம் தயங்கினேன். பிறகு மனத்தைத் திடம் செய்து கொண்டு பேச ஆரம்பித்தேன். "சுலோசனா! உங்களை நான் இவ்வளவு தூரம் மனம் நோகச் செய்ததற்காக வருந்துகிறேன். நானும் உங்களைப் போன்ற மன வேதனையையே அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். அதனால் என்னால் உங்களுடைய துயரத்தை நன்றாகப் புரிந்து கொள்ள முடிகிறது.

"நானும் ஒரு பெண்ணை மனப்பூர்வமாக நேசிக்கிறேன். அவளை என்னால் மறக்க முடியவில்லை. அவளுடைய நினைவைப் பெயர்த்தெறிய நானும் முயற்சி செய்துதான் பார்க்கிறேன், சுலோசனா. ஆனால் முடியவில்லை" என்று நிறுத்தினேன். இந்துவைப் பற்றிச் சொல்வதா வேண்டாமா என்ற போராட்டம் மனத்தில் எழுந்தது. முழுதும் சொல்லிச் சற்று மன ஆறுதல் அடைய வேண்டும்போல ஒரு நிமிஷம் தோன்றியது. உடனேயே 'சே! என்ன கேவலமான எண்ணம்? எனக்குப் பத்து நிமிஷ ஆறுதலுக்காக இந்துவைப் பற்றிக் குறை சொல்வதா? பிறகு பத்மநாபனுடைய நண்பர்களுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? இவளுக்கு ஏற்கனவேயே அவளைப் பிடிக்காது. நான் வேறு அதற்குத் தூபம் போடுவானேன்? மேலும் இந்துவைப் பற்றி நான் சொன்னால் சுலோசனா எனக்கு அவளை மறந்து விடும்படி உபதேசம் செய்யத் தொடங்கலாம். வேண்டாம்! வேண்டாம்! இந்துவைப் பற்றிப் பேசவே வேண்டாம்' என்று தீர்மானித்தேன்.

சுலோசனா பேசாமல் என் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். நான் மௌனமாக இருக்கவே, "உங்களுக்கு விருப்பமில்லையென்றால் நான் சொல்ல வேண்டுமென்று வற்புறுத்தவில்லை, மிஸ்டர் ராய். நான் என்னைப் பற்றி உங்களிடம் கூறத்தான் வந்தேன். என் மனத்தை உங்களிடம் திறந்து காட்டிய பிறகு எனக்கு மனச்சுமை ரொம்பக் குறைந்து போய் விட்டது. நான் போகிறேன்" என்றாள்.

என் மனப் போராட்டத்தை அவள் எவ்வளவு எளிதில் புரிந்து கொண்டாள் என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"சுலோசனா! உங்கள் இதயம் ரொம்பப் பண்பட்ட இதயம். உங்களைப் போன்றவர்களை அதிகமாகச் சந்திக்க முடிவதில்லை. உங்களுடைய நண்பனாக நான் என்றென்றும் இருப்பேன். உங்களுக்கு எந்த உதவி வேண்டுமானாலும் என்னிடம் தயங்காமல் நீங்கள் கேட்கலாம். இன்னொரு சமயம் நான் அடைந்த ஏமாற்றத்தைப் பற்றிக் கூறுகிறேன். இப்போது வேண்டாம். அதற்குக் காரணமிருக்கிறது. அதனால் உங்களிடம் எனக்கு நம்பிக்கைக் குறைவு என்று எண்ண வேண்டாம். என்னைப்

பற்றி என்னால் தயங்காமல் கூற முடியும். இன்னொருவரைப் பற்றிக் கூற எனக்குத் தயக்கமாக இருக்கிறது. மன்னித்து விடுங்கள்!'' என்றேன்.

கைலாசனு என் சங்கடத்தைப் புரிந்து கொண்டான். "உங்களுக்கே சொல்ல வேண்டுமென்று தோன்றினால் பிறகு கேட்கிறேன். இப்போது நான் போய் விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு எழுந்து சென்றான்.

கதவின் அருகில் சென்றவன் திரும்பி வந்து, "மிஸ்டர் ராய்! நீங்கள் இன்னொரு பெண்ணை நேசிப்பதாகக் கூறியதால் என் மனம் உடனே மாறி விடவில்லை. நான் இன்று உங்களுடன் மனம் விட்டுப் பேசியதை என்றென்றும் மறக்க மாட்டேன்'' என்றான்.

"கைலாசனு! அப்படிக் கூறாதீர்கள். இன்று நாம் பேசியதை அடியோடு மறந்து விடுங்கள். முன்போலவே நாம் பழகுவோம்.''

"மனம் என்ன கரும்பலகையா? ஒரு விஷயத்தை உடனே அழித்து விடுவதற்கு? அதுவுமல்லாமல் என் வாழ்க்கையிலேயே நான் இப்படிப் பேசியது இது தான் முதல் தடவை. இதுவே கடைசித் தடவையாகவும் இருக்கும். ஆனால் இந்த ஞாபகம் என்னை விட்டு அகலவே அகலாது. இந்த இனிமையான ஞாபகத்திலேயே நான் வாழ்க்கையைக் கழித்து விடுவேன். ஆனால் உங்களிடம் மறுபடியும் நானாக இப்படிப் பேச்சை ஆரம்பிக்க மாட்டேன். இதை நீங்கள் நம்பலாம்!'' என்று கூறிவிட்டுச் சட்டென்று திரும்பி வெகு வேகமாகப் போய்விட்டான். கார் புறப்பட்டு வேகமாகப் போகும் ஓசை கேட்டது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். கைலாசனுவே காரை ஓட்டிக் கொண்டு சென்றான். அவனுடைய மன நிலையில் எங்கேயாவது காரை இடித்து விடப்போகிறானே என்று எனக்குக் கவலையாக இருந்தது.

கைலாசனு சென்ற பிறகு சொல்ல முடியாத சோர்வு என்னை வந்து சூழ்ந்து கொண்டது. வெகுநேரம் ஏதேதோ சிந்தனைகளுடன் சோபாவிலேயே விழுந்து கிடந்தேன்.

என்றையும் விட இந்துவின் நினைவு ரொம்ப அதிகமாக வந்தது. கைலாசனுவுடன் பேசிய பிறகு இந்துவைப் பார்க்க வேண்டுமென்ற தாபம் அடக்க முடியாமல் பெருகியது. பக்கத்தில் கிடந்த பத்திரிகையை எடுத்து இந்துவின் படத்தை மறுபடியும் பார்த்தேன். கள்ளங் கபடமில்லாத அவள் உள்ளம் கண்களின் மூலம் பிரகாசித்தது.

'இந்துமதியின் பார்வையில் இவ்வளவு பிரகாசம் இருக்கிறதே. அது




பிரயாணி :— இப்படியே போய் விடாது, உங்கள் காலம்! மரியாதையாக என்னை ஏற்றிக் கொள்ளும் காலம் வரும். அல்லது ஒரு மரியாதை வாரமாவது நிச்சயம் வரும்!

---

வும் ஒரு சோகத்துடன் கூடிய பிரகாசமாக அல்லவா இருக்கிறது? ஒருவேளை நான் அவசரப்பட்டு விட்டேனோ? அவளிடம் மனம் விட்டுப் பேசியிருக்க வேண்டுமோ? நான் இன்னும் சற்றுப் பொறுமையாக இருந்திருக்கலாம். என்னைப் பார்த்த திகைப்பு அவளுக்கு நீங்குவதற்குள்ளேயே, நான் அவள் மனம் புண்படும்படி பேசி விட்டேனோ?

ஆம்! அவளைப் பார்த்தபோது எனக்குக் கொஞ்சம் பொருமை உணர்ச்சி உள்ளே இருந்தது. அதனால் நான் அப்படிப் பேசினேன். எப்படியும் இன்னொரு தடவை அவளைச் சந்தித்துவிட வேண்டும். அவள் ஒருவேளை என்னைத் தேடிக் கொண்டிருக்கலாமல்லவா? நான் இருக்குமிடம்தான் அவளுக்குத் தெரியாதே. ஒருவேளை அன்று பேசிய விதத்துக்காக அவள் மனம் நொந்து வருந்திக் கொண்டிருக்கலாம்.

எனக்குத் திடீரென்று இந்துவைப் பார்க்காவிட்டால் நெஞ்சு வெடித்து விடும் போல இருந்தது. உடனே சென்று இந்துவைப் பார்க்க வேண்டுமென்று மனம் பறந்தது. ஸ்நானம் செய்து விட்டு 'இதய வீணை' படம் ஓடும் தியேட்டருக்கு அவசரமாகப் புறப்பட்டுச் சென்றேன். அதைப் பார்ப்பதன் மூலமாவது இந்துவைப் பார்க்க வேண்டுமென்ற என் தாங்க முடியாத தாபம் தணியாதா என்ற ஏக்கத்துடன் தான் சென்றேன்.

சர்வர் :—கொஞ்சம் இருங்கள்! உங்களுக்கு வெந்துண்டு இருக்கு; உங்களுக்கு வறுபட்டுண்டு இருக்கு; உங்களுக்கு அரைபட்டுண்டு இருக்கு; உங்களுக்கு அவிஞ்சிண்டு இருக்கு; உங்களுக்கு ஊறிண்டு இருக்கு!

---

விளக்குகள் அணைந்து படம் தொடங்கியது. விம்மும் இதயத்துடன் இந்துவின் முகம் எப்போது தோன்றுமென்று காத்துக் கொண்டிருந்தேன்.

எனக்குத்தான் இந்துமதிமேல் கோபமாயிற்றே! அவள் திரையில் தோன்றியதும் அப்படி மனம் கசிந்து போவானேன்? கண்களில் நீர் துளிப்பானேன்? சே! அவ்வளவு துச்சமாக என்னைப் பேசியவளுக்காக நான் ஏன் என் கண்ணீரை வீணாக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டேன்.

படம் மேலே செல்லச் செல்ல அதில் கதாநாயகனாக நானே மாறிவிட்டேன். குங்குமத்துறையின் இயற்கை வனப்புகளுக்கு மத்தியில் காதலர்கள் சந்திப்பதும் பேசுவதும், பாடுவதும் எனக்கு எத்தனையோ விதமான உணர்ச்சிகளைத் தூண்டி விட்டன.

இந்து அவற்றையெல்லாம் மறக்கவே இல்லை. படத்தைக் குங்குமத்துறையில் எடுக்க வேண்டுமென்று அவள்தான் சொல்லி யிருப்பாள். அதில் சந்தேகமில்லை. அதுவும் பாதிரித் தோட்டத்திலேயே படம் எடுக்கப்பட்டிருந்தது. அது மாத்திரமா? கதாநாயகன் மரத்தின் கிளைமீது உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருக்கிறான். அப்போது இந்துமதி பாடிக் கொண்டே வருகிறாள். எனக்கு அப்படியே பரவசமாகிவிட்டது. அடுத்தாற்போல அந்தத் திரைப்படக் கதாநாயகன் இந்துவுடன் பேசியபோது அவனுடைய கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிட வேண்டுமென்று கூட ஆத்திரம் உண்டாயிற்று.

இந்து நான் நினைத்தமாதிரி அடியோடு எல்லாவற்றையும் மறந்துவிடவில்லை. அவளுடைய குழந்தை உள்ளத்தில் அரும்பி மலர்ந்த காதல் இன்னும் மணம் வீசிக் கொண்டுதான் இருக்கிறது. அவளுடைய இதயத்தில் பொங்கிக் கொண்டிருக்கும் அன்புதான் என்னை அன்று பார்த்தவுடன் அலட்சியமாகப் பேச வைத்தது. அவளுடைய அளவிலாத அன்பினால் தான் என்னிடம் அவள் எரிந்து விழுந்தாள்.

இந்த எண்ணங்களெல்லாம் முட்டி மோதிக் கொண்டு வெளியே வந்தன. அப்போது நான் தாங்கமுடியாத வேதனையை அடைந்தேன்.

இந்துவின்மீது எனக்கு அளவிலாத கோபம் ஏற்பட்டிருந்தது. அந்தக் கோபம், என் நெஞ்சத்தில் அவள்மீது ஏற்பட்டிருந்த அன்பென்னும் அக்னிக் குழம்பைக் கெட்டியாக மூடிப் பாறையாக உறைந்திருந்தது. இந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போதே, உள்ளே இருந்த அக்னிக் குழம்பு பாறைகளைத் தகர்த்து எறிந்து விட்டு வெளியே வந்து பாய்ந்தது. அந்த வெம்மையில் நான் கருகிப் போனேன்.

படம் முடிந்ததும் வீட்டுக்கு வந்தேன். உடம்பு கொதித்தது. தலையையும் மார்பையும் ரொம்ப வலித்தது. தாங்க முடியாத சோர்வு என் உடலைப் பற்றிக் கொண்டது. தள்ளாடி நடந்து போய்ப் படுக்கையில் உட்கார்ந்தேன். டெலிபோனை எடுத்து டாக்டரை வரச் சொல்லிவிட்டுப் படுத்தேன்.

'இந்துவை ஒரு முறை பார்த்து, என் மீது அவளுக்கிருந்த அன்பு மாறவில்லை என்று தெரிந்து கொள்ளாமல் இறந்து போகக்கூடாது. அப்படி நான் குறையுடன் இறந்து போய் விட்டால் இன்னும் தொடர்ந்து வரும் எத்தனையோ பிறவிகளில் என் மனக்குறை தீராது.'

இந்துவைப் பார்த்து, 'இந்து! நீ என்னை அலட்சியம் செய்யவில்லை என்று சொல்லு. என்மீது உனக்கு உண்டான பிரேமை அழியவில்லை என்று சொல்லு. இல்லை! அப்படிச் சொன்னால் போதாது. என்மீது உனக்கு அன்பு பொங்கித் ததும்பிக் கொண்டிருக்கிறது என்று சொல்லு. இரவும், பகலும் என்னை நினைத்து ஏங்கினாய் என்று சொல்லு. இல்லாவிட்டால் என் இதயத்தில் எரியும் நெருப்புத் தணியாது' என்றெல்லாம் பேச வேண்டுமென்று கற்பனை செய்து கொண்டேன். நெஞ்சில் ரொம்ப வலியாக இருந்தது. என் மன வேதனையும் மிகுந்தது. (தொடரும்)


Erasmic
PERFUMED
COCONUT
HAIR OIL
கூந்தலுக்கு இராஸ்மிக்
பரிமள தேங்காயெண்ணெய்
ECH. 1-50 TM

புதுமை பெறுக!
இதம் பெறுக! இளமையாய் இருங்கள்!
நாள் முழுதும்!

சார்மிஸ் டால்கம் பவுடரை உபயோகித்து, அதன் சிறந்த சுகமணத்தை அநுபவியுங்கள். குளித்த பின் சார்மிஸ் டால்கம் பவுடரை மேலெங்கும் தூவுக. அது புதுமையும் குளுமையும் தருகிறது. அரிப்பு வராமல் அதன் பட்டுப்படலம் பாதுகாக்கிறது. சார்மிஸ் டால்கம் பவுடர் சிக்கனமான அத்யாவசியப் பொருள். இன்பம், அழகின் இரகசியம் அது.





# சார்மிஸ்
## டால்கம் பவுடர்
மிகவும்
சிறந்த இன்ப மணமுள்ளது



CH-TP6/5



அவள் சந்தோஷமும் அழகும் தேக புஷ்டியும்

பெற்று விளங்குவதற்கு
காரணம் அவள் சாப்பிடும்

FBY-31-TAM

# பைல் பீன்ஸ்
உபரி குண மலசுத்தி மாத்திரை.

அசல் பைல் பீன்ஸ் மாத்திரைகள் டாக்டர்களால் அங்கீகரிக்கப்பட்டவை; உலகப்பிரசித்தி பெற்றவை. உங்கள் அசதிக்கும் மந்தத்திற்கும் காரணமான மலச்சிக்கலை அவை போக்கடிக்கின்றன. உங்கள் ரத்த ஓட்டத்தை சுத்தப்படுத்தி, குடலுக்கு ஊக்கமளித்து, தேகத்திற்கு புத்துயிரூட்டி, சருமத்தையும் சுத்தப்படுத்துகிறது. பைல்பீன்ஸை தொடர்ந்து உபயோகித்தால், இளமையும் சுறுசுறுப்பும், சிறந்த ஆரோக்கியமும், கவர்ச்சியும் பொருந்தியவராக ஆகலாம். இப்பொழுதே ஆரம்பித்து பைல் பீன்ஸ் தொடர்ந்து சாப்பிடுங்கள்—வாழ்க்கையை பூரணமாக அனுபவிக்கலாம்.




அசல்
பைல் பீன்ஸை
பார்த்து வாங்குங்கள்.
எல்லா
மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

ஸோல் ஏஜண்டுகள்:
தாதா & கோ., 86, அங்கப்ப நாயக் தெரு, சென்னை-3

# மனித உள்ளம்




சாமான் வாங்கி வரக் கடைக்குக் கிளம்பினேன். நான் வழக்கமாக வாங்கும் மன்னார்சாமிக் கடையை நோக்கித்தான் போய்க் கொண்டிருந்தேன்.

மளிகைக் கடை மன்னார்சாமியைத் தெரியாதவர்கள் அந்த ஊரில் யாருமே இருக்க முடியாது. சிறு குழந்தைகள் முதல் தொண்டு கிழம் வரையில் எல்லோருக்கும் அக்கடை இருக்கும் இடம் தெரியும். அவ்வளவு பெயர் பெற்றுவிட்ட அக்கடையின் மாகாத்மியம்தான் என்ன? கடையின் சொந்தக்காரரான மன்னார்சாமி மிகவும் கண்யமானவர். நாணயத்துக்குப் பெயர் போனவர். உண்மையும், உழைப்பும் அவரை வெகுவாக உயர்த்தி விட்டன. சின்னஞ் சிறு குழந்தைகளிடம் சாமான் வாங்கி வரும்படி காசைக் கொடுத்து அனுப்பினால்கூடச் சரியான எடை போட்டுக் கொடுப்பார். குழந்தைகள் மீதச் சில்லறை வாங்க மறந்து விட்டால் கூப்பிட்டுக் கொடுத்து அனுப்புவார். எல்லோரிடமும் அன்போடும், அடக்கத்தோடும் பேசுவார். 'மளிகைக் கடை மன்னார்சாமி' யிடம் எனக்கு அலாதி மதிப்பு. நான் சென்று விட்டால், ஆசனம் கொடுத்து உட்காரச் செய்து, சாமான்களையெல்லாம் ஒழுங்காகக் கட்டிக் கொடுப்பார்.

நான் பையுடன் கடையை அடைந்தேன். என்னை இன்முகத்துடன் வரவேற்று ஆசனமொன்றில் உட்காரச் செய்தார் மன்னார்சாமி. நான் போயிருந்த சமயம் சுவாமிக்குக் கற்பூர ஆரத்தி நடந்து கொண்டிருந்தது. நான் எழுந்து நின்று கைகளைக் கூப்பி வணங்கினேன். முருகன் படம் அழகாகச் சட்டம் இட்டுச் சுவரில் மாட்டப்பட்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் மகாலட்சுமியைப் போல் காட்சி அளித்த ஒரு அம்மாளின் படம் மாட்டப்பட்டிருந்தது. நெற்றியில் காலணா அளவுக்குக் குங்குமப் பொட்டு; தெய்விகக் களை பொருந்திய அந்த முகத்தைப் பார்த்ததும், அசல் மகாலட்சுமியே அங்கே கம்பீரமாக வீற்றிருப்பது போல் தோன்றியது.

நான் மன்னார்சாமியைப் பார்த்து, "அந்தப் படத்தில் இருக்கும் அம்மாள் யார்? உங்கள் தாயாரோ...?" என்று இழுத்தேன்.

அவர் அதற்கு உடனே பதில் சொல்லவில்லை. புன்னகை ஒன்றை உதிர்த்து விட்டு என்னை நோக்கினார்.

"அந்த அம்மாள் எனக்கு வாழ்வளித்த தெய்வம், ஸார்!" என்றார் நிதானமாக.

அவர் சொல்வது எனக்கு விளங்கவில்லை.

"சற்று விரிவாகத்தான் கூறுங்களேன்" என்றேன்.

அவர் தம் கடந்த கால வாழ்க்கை ஏடுகளை எனக்குப் பிரித்துக் காட்டினார்.

மன்னார்சாமிக்கு அப்பொழுது பத்து வயது. தன்னுடைய சகோதரியையும், தாயையும் காக்கும் பொறுப்பு அவன் தலையில் விழுந்தது. பத்து வயதிலேயே குடும்பப் பொறுப்பை நன்கு உணர்ந்து கொண்டான் மன்னார்சாமி. அப்பொழுது அந்த ஊரில் மளிகைக் கடை வைத்திருந்த வேலாயுதம் என்பவரிடம் சாமான் எடுத்துக் கொடுக்கும் கை ஆளாக வேலைக்கு அமர்ந்தான் மன்னார்சாமி.

காலை எட்டுமணிக்குக் கடைக்குச் சென்று விட்டால் இரவு ஒன்பது மணி வரையில் மாடாக உழைப்பான். பகல் வேளையில் சாப்பாட்டுக்குக்கூட வீட்டுக்கு வர மாட்டான் அவன். சாப்பாடு அவனுக்கு அங்கேயே வந்து விடும். சில சமயம் அவனை நம்பிக் கடையை விட்டு விட்டு வெளியே சென்று விடுவார் வேலாயுதம். அவன் தமக்குத் துரோகம் இழைக்க மாட்டான் என்று அவர் நம்பினார். மன்னார்சாமி நேர்மையானவன். பிறத்தியார் பொருளை அபகரிக்க வேண்டும் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் என்றுமே எழுந்தது கிடையாது. கடையில் இதுவரையில் ஒரு துரும்புகூடக் காணாமல் போனது கிடையாது.

மாதம் அவனுக்குப் பதினைந்து ரூபாய் சம்பளம். அதை வைத்துக் கொண்டு மூன்று ஜீவன்கள் பிழைக்க வேண்டும். கஷ்டப்பட்டு வாழ்க்கைப் படகைத் தள்ளி வந்தான். என்றாவது ஒரு நாள் தனக்கு நல்ல காலம் பிறக்கும் என்று அவன் நம்பினான். கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் சலியாமல் உழைத்தான். உழைப்புக் கேற்ற ஊதியம் கிடைக்காததைப் பற்றி அவன் சிறிதேனும் சஞ்சலப் படவில்லை.



அன்று ஒரு நாள். மன்னார்சாமி கடையில் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தான். அன்று எசமான் கடைக்கு வரவில்லை. ஏதோ காரியமாக வெளியே சென்றிருந்தார். காசை வாங்கிக் கல்லாவில் போடும் பொறுப்பும் அவனைச் சேர்ந்து கொண்டது. சாமான்களைக் கட்டிக்கொண்டிருந்த மன்னார்சாமியிடம், "முதலாளி எங்கேடா மன்னார்சாமி?" என்று அதிகார தோரணையில் கேட்ட குரலைக் கேட்டுத் தலை நிமிர்த்து பார்த்தான். எதிரே ரௌடி ரங்கன் நின்று கொண்டிருந்தான். ரங்கன் பெயருக் கேற்றபடி பெரிய ரௌடி. ஊரிலே நடக்கும் கலகங்களுக்கும், அக்கிரமங்களுக்கும் காரண கர்த்தாவாக இருப்பவன் அவன். முறுக்கு மீசையைத் தடவிக் கொண்டே கையிலே ஒரு கம்பைச் சுற்றிக் கொண்டு அவன் நடந்து வந்தால் போதும்; அழுத குழந்தை வாயை மூடும். அழாத குழந்தை அழ ஆரம்பித்து விடும். எல்லோருக்குமே அவனிடம் பயம். ஆகையால் யாரும் அவனிடம் பகைத்துக்கொள்ள மாட்டார்கள். நயமாகப் பேசி அவனை அனுப்பி விடுவார்கள்.

"என்னடா கேட்கிறேன், தடியாட்டமா நிக்கறயே? எங்கே எசமான்!" என்றான் மீசையை முறுக்கி விட்ட வண்ணம்.

"அவரு வெளியே போயிருக்காரு" என்றான் மன்னார்சாமி.

"ஓகோ......சரி......ஜல்தியா ஒரு ஐந்து ரூபாய் எடு..............நாளைக்கு நான் திருப்பித் தரேன்" என்றான் ரங்கன் கையை நீட்டியபடி.

"என்ன......ஐந்து ரூபாயா...அவரைக் கேட்காமல் நான் கொடுக்க முடியாதுங்க." அவன் பேச்சிலே கண்டிப்பு தொனித்தது.

"என்ன, கொடுக்க மாட்டியா! ......கொடுக்கப் போறியா...... இல்லே......" ரௌடி ரங்கன் பேச்சை முடிக்கவில்லை.

"அவரைக் கேட்காமல் சல்லிக் காசுகூட எடுக்க எனக்கு அதிகாரம் இல்லீங்க" என்றான் மன்னார்சாமி அடக்கத்துடன்.

"டேய்! நீ இப்போ கொடுக்கப் போறியா...இல்லாட்டி" என்று சொல்லியவன் ஆத்திரத்தில் கையிலிருந்த கம்பை ஓங்கினான். ஓங்கிய கை ஓங்கியபடியே

இருந்தது. தெருவில் போய்க் கொண்டிருந்த போலீஸ்காரன் ஓடி வந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டான்.

"என்ன ரங்கா! இந்தப் பையனிடம் போய் என் சண்டைபோடறே! போப்பா" என்று சொல்லித் தாஜா பண்ணி அவனை அனுப்பி வைத்தான் போலீஸ்காரன். ஆம்! அவனுக்குக் கூட ரங்கனிடம் முறைக்கத் தைரியம் கிடையாது!

ஒரு வாரம் ஓடி மறைந்தது. ரங்கனுக்கு மன்னார்சாமியின்மேல் ஒருவித வெறுப்பு ஏற்பட்டு விட்டது. தான் கேட்ட உடனே



பணம் கொடுக்க மறுத்த அவனை ஒழித்துக் கட்ட எண்ணினான். வேலாயுதத்தினிடம் சென்று வத்தி வைக்க ஆரம்பித்தான்.

"உங்க கடைப் பையனைப் பற்றிய விஷயமே தெரியாது போலிருக்கு உங்களுக்கு" என்று ஆரம்பித்தான் ரௌடி ரங்கன்.

அந்தச் சமயம் மன்னார்சாமி கடையில் இல்லை. வெளியே சென்றிருந்தான்.

வேலாயுதம் திகைப்புடன், "என்ன சமாசாரம்? ஏதாவது தப்புத் தண்டாவில் மாட்டிக்கிட்டானா, என்ன!" என்றார்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லீங்க...... கடையை அவன் பொறுப்பில் ஒப்படைச் சுட்டுப் போறீங்களே, பையன் எவ்வளவு காக திருடறான் என்பது உங்களுக்குத் தெரியுமா?" என்றான் ரங்கன்.

வேலாயுதம் நிமிர்ந்து உட்கார்ந்தார். "என்ன! மன்னார்சாமியா திருடன்! இருக்காதப்பா! நான் இதை நம்பவே மாட்டேன்" என்றார்.

"சரிதான் போங்க...வெளுத்ததெல்லாம் 'பால்'னு நினைப்பு உங்களுக்கு...நேற்று கல்லாவில் இருந்து ஒரு பிடி சில்லறையை மடியில் கட்டிக்கிட்டு இருக்கும் பொழுது நம்ப 'கொண்டித்தோப்பு குப்பன்' பார்த்தானும்..." என்று சொல்லி அவர் உள்ளத்திலே சந்தேகப் புயலைக் கிளப்பி விட்டான்.

"அப்படியும் இருக்குமா?" என்ற கேள்வி எழுந்தது. கொண்டித் தோப்பு குப்பனைக் கூப்பிட்டு விசாரித்தார். அவன் ரௌடி ரங்கனின் கை ஆள்தானே! உடனே இல்லாததையும், பொல்லாததையும் சொல்லி அவருடைய பால் போன்ற மனத்தில் விஷத்தைக் கலந்து விட்டுச் சென்றுவிட்டான். இருந்தாலும் வேலாயுதம் பொறுமையை இழக்கவில்லை. தாமே கண்டால் ஒழிய எதையும் நம்பமாட்டார் அவர். ஆகையால் பொறுத்திருந்தார், அவனைக் கையும் களவுமாகப் பிடிக்க.

மன்னார்சாமி கடைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தான். அவன் தாயார் அச்சமயம் அங்கு வந்து, "ஏண்டா மன்னார்சாமி! வீட்டுக்காரனுக்கு மூணு மாசமா பாக்கி...கழுத்தை நெரிக்கிறான். எசமாங்கிட்டே சொல்லி ஏதாவது கேட்டுப் பாரேன்" என்றாள்.

'எசமானனிடம் கேட்டால் கொடுப்பார். ஆனால் அவர் கடனாகத்தானே கொடுப்பார்? மாதம் பிறந்தால் சம்பளத்தில் பிடித்துக் கொள்வார். பிறகு சாப்பாட்டுக்கு வழி ......?' — சிந்தித்த வண்ணம் கடைக்கு வந்தான். கடைக்குப் பின் கட்டில்தான் எசமான் வேலாயுதத்தின் வீடு. கடையைத் தினமும் திறப்பது மன்னார்சாமியின் வேலை. அவன் கடையைத் திறந்து தூசிகளைத் தட்டிச் சாமான்களை ஒழுங்கு படுத்தின பிறகுதான் எசமான் வருவது வழக்கம். கடையைத் திறக்கச் சாவி வாங்கி வர, எசமான் வீட்டுக்குள் சென்றான். எசமான் வீட்டில் இல்லை. அவர் மனைவி லட்சுமி அம்மாள் வந்தாள்.

"மன்னார்சாமி! ஐயா வெளியே போயிருக்காரு. இந்தா சாவி......கடையைத் திறந்து வியாபாரத்தைக் கவனி" என்றாள்.

சாவியை அவனிடம் கொடுத்த லட்சுமி "ஏண்டா ஏதாவது காலையில் சாப்பிட்டாயாடா?" என்றாள் அன்புடன்.

'இல்லை' என்ற பாவனையில் அவன் தலையை ஆட்டினான். உடனே அவள் உள்ளே சென்று ஒரு இலையில் இடியாப்பத்தைக் கொண்டு வந்து அவன் முன் வைத்துச் சாப்பிடச் சொன்னாள்.

லட்சுமியின் நற்குணத்தைப் போற்றிய வண்ணம் அவன் அதைச் சாப்பிட்டு முடித்தான். லட்சுமிக்கு மன்னார்சாமியின்மேல் தனி வாஞ்சை. குழந்தையில்லாத அவளுக்கு மன்னார்சாமியின் மேல் தனி அன்பு விழுந்து விட்டது.

சாவியை வாங்கிக்கொண்டு வந்து கடையைத் திறந்தான் மன்னார்சாமி. சாமான்களையெல்லாம் ஒழுங்குபடுத்தி வைத்து விட்டுக் கல்லாப் பெட்டி அருகில் வந்து உட்கார்ந்தான். கல்லாவைத் திறந்து தூசியைத் துடைத்தான். துடைத்தவன் கல்லாப் பெட்டியின் மூலையில் ஒரு பத்து ரூபாய் நோட்டு கசங்கிக் கிடப்பதைக் கண்டு வியப்புற்றான். அதே சமயம் அவன் மனத்தில் மின்னல் வேகத்தில் ஓர் எண்ணம் பளிச்சிட்டது.

"இதை ஏன் நான் எடுத்துக் கொள்ளக் கூடாது? வீட்டு வாடகைக்காவது கொடுக்கலாமே..."—வாழ்க்கையில் முதல் முறையாக அவனுக்கு அந்த விபரீத எண்ணம் தோன்றிற்று. அடுத்த கணம் பத்து ரூபாய் நோட்டை எடுத்துத் தன் சட்டைப் பையில் திணித்துக் கொண்டான்.

அன்று அவனுக்குப் பகல் சாப்பாடு வரவில்லை. வீட்டிலேதான் காலணாக் கிடையாதே, எங்கிருந்து அவனுக்குச் சாப்பாடு வரும்? கடையை மூடிச் சாவியைக் கொண்டு போய் முதலாளியின் மனைவி லட்சுமியிடம் கொடுத்து விட்டு, வீட்டுக்குச் சென்று சாப்பிட்டு வருவதாகக் கூறிச் சென்றான்.

வீட்டுக்கு வரும் பொழுது அவன் மனத்தில் நல்ல எண்ணம் தலைதூக்கியது. 'சீ! என்ன காரியம் செய்தேன்...... முதலாளிக்கு விஷயம் தெரிந்தால் என்னைப் பற்றி என்ன நினைப்பார்!' என்று எண்ணிய வண்ணம் வீடுவந்து சேர்ந்தான்.

சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டி விட்டு உள்ளே சென்றான். அவன் தாயார் அப்பொழுதுதான் கடனாக வாங்கி வந்த அரிசியை உலையில் வைத்திருந்தாள். அவனுக்கு ஒரே களைப்பாக இருந்தது. துண்டை உதறிக் கீழே விரித்துப் படுத்தான். படுத்தவன் தூங்கியே விட்டான். அவன் தாயார் வந்து எழுப்பவே, திடுக்கிட்டுக் கண் விழித்தான்.

சாப்பிட்டு விட்டுக் கடைக்குக் கிளம்பினான். "பணத்தைக் கொண்டு போய்க்

கல்லாவில் வைத்துவிட வேண்டுமென்று எண்ணிய வண்ணம் சட்டையை மாட்டிக்கொண்டு வெளியே வந்தான். அவன் தாயார் பின்தொடர்ந்து வந்து, "மன்னார்சாமி! நீ தூங்கிக்கிட்டு இருக்கும்பொழுது வீட்டுக்காரப் பாவி வந்து கத்தினான். நீ எதினாச்சம் முதலாளிக்கிட்டே விருந்து வாங்கியாந்தியான்னு பார்க்கச் சட்டைப் பையைப் பார்த்தேன். பத்து ரூபாய் இருந்தது. எடுத்துக் கொடுத்து அனுப்பி வைச்சேன். நல்ல காலம் நீ வாங்கி வரலேன்னா, சந்தி சிரிச்சிருக்கும்" என்றாள்.

அவனுக்குத் 'திக்'கென்றது. "என்ன! பணத்தை எடுத்துக் கடன்காரனுக்குக் கொடுத்திட்டாயா?" என்று சொல்லியவன் சிலையாகச் சமைந்து விட்டான். இப்பொழுது அவன் முதலாளி கேட்டால் என்ன பதில் சொல்வான்? அவனுக்கு என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. முதலாளியின் நம்பிக்கைக்கு மிகவும் பாத்திரமான அவன், செய்வதறியாமல் மனம் குழம்பிய வண்ணம் கடைக்கு வந்தான். சாவியை வாங்கி வந்து கடையைத் திறந்தான். வெளியே சென்றிருந்த முதலாளி வேலாயுதம் இன்னும் வீடு திரும்ப வில்லை என்ற செய்தி அவனைத் தாற்காலிகமாக நிம்மதியுறச் செய்தது.

மணி நாலடித்து ஓய்ந்தது. முதலாளி வந்து விட்டார்! மன்னார்சாமியின் நெஞ்சம் குறுகுறுத்தது.

"டேய், மன்னார்சாமி! இங்கே வா" என்றார் முதலாளி வேலாயுதம்.

அவன் அருகில் போய் நின்றான்.

"நேற்றிரவு மறதியாகப் பத்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கல்லாவில் வைத்து விட்டுச் சென்றுவிட்டேன். இந்தா சாவி... கல்லாவைத் திறந்து அதை எடு..." என்று சொல்லிய வண்ணம் சாவியை நீட்டினார்.

அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. உடல் நடுங்க, கைகளை உதறி, சாவியை வாங்கிக் கல்லாவைத் திறந்தான். உள்ளே கண்களைச் செலுத்தினான். அவனுக்குப் பணம் இருக்காது என்பது நிச்சயம் தெரியும். இருந்தாலும் நடிக்கத்தான் செய்தான்.

கண்களைக் கல்லாவினுள் செலுத்தியவன் ஆச்சரியம் அடைந்தான்! பத்து ரூபாய் நோட்டு ஒன்று அதனுள் இருந்தது. அவனுக்கு ஒரே வியப்பாக இருந்தது. காலையில் அவன் பணத்தைக் கையாடி இருக்க இன்னொரு பத்து ரூபாய் நோட்டு அதில் எப்படி வந்தது? ஆச்சரியமும், ஆவலும் ஒன்றை யொன்று உந்தித் தள்ள வேலாயுதத்தினிடம் எடுத்துக் கொடுத்தான்.

"மன்னார்சாமி! நீ யோக்கியமானவன். உன்னைப் பற்றி அவதூறாக இல்லாததை யெல்லாம் சொல்லி என் உள்ளத்தைக் கெடுத்து விட்டான் பாவி!" என்று





சொல்லி அவனை அணைத்துக் கொண்டார். பிறகு ரௌடி ரங்கன் கூறினதை அவனிடம் வர்ணித்தார்.

"உன்னைப் பரீட்சிக்கவே பத்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கல்லாவில் வைத்து விட்டுச் சென்றேன். ஆனால் நீ அதைத் தொடக்கூட இல்லை ...... உன்னுடைய நேர்மையை நான் எப்படிப் புகழ்வேன்?" என்று சொல்லிய வண்ணம் அவனை வானளாவப் புகழ்ந்தார்.

மன்னார்சாமி வியப்புக் கடலில் மூழ்கி விட்டான். நடப்பது எல்லாம் அவனுக்குக் கனவாகவே தோன்றியது.

கடையைச் சாத்திவிட்டு வீடு நோக்கி வந்து கொண்டிருந்தான் மன்னார்சாமி. ஒரு சிறுவன் ஓடிவந்து கடிதம் ஒன்றை நீட்டி விட்டு மறைந்து விட்டான். அவன் கடிதத்தைப் பிரித்துப் படித்தான்.

மன்னார்சாமிக்கு லக்ஷ்மி அம்மாள் எழுதிக் கொண்டது.

உன் நடத்தையில் சந்தேகம் கொண்ட முதலாளி உன்னைப் பரீட்சிக்க எண்ணினார். பத்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கல்லாவில் வைத்து விட்டுச் சென்றார். அதை நீ 'எடுக்கிறாயா இல்லையா' என்று பார்த்து அதன்மூலம் உன்னை எடை போட எண்ணினார். அவர் என்னிடம் இதை முன்பே தெரிவித்திருந்தார். நீ எடுக்க மாட்டாய் என்றுதான் நானும் எண்ணினேன். ஒரு வேளை உன் ஏழைமை நிலை உன்னை எடுக்கத் தூண்டினால் என்ன செய்வது என்ற எண்ணமும் கூடவே எழுந்தது. ஆகையால் நீ பகல் சாப்பாட்டிற்குச் சென்றிருந்த சமயம் கடையைத் திறந்து கல்லாவைப் பார்த்தேன்! பத்து ரூபாய் நோட்டை நீ எடுத்துச் சென்று விட்டாய். 'முதலாளிக்கு விஷயம் தெரிந்தால் உடனே உன்னை வேலையை விட்டு நீக்கிவிடுவார் என்பது எனக்குத் தெரியும். உடனே நான் அவருக்குத் தெரியாமல் பத்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கல்லாவில் வைத்துவிட்டுக் கடையைச் சாத்திக் கொண்டு வீட்டுக்குச் சென்று விட்டேன். உன் மேல் எனக்கேற்பட்ட பாசமே அப்படிச் செய்யத் தூண்டிற்று. முதலாளியிடம் இதைப் பற்றி நான் மூச்சு விடமாட்டேன். இனியாவது நேர்மையாக நடக்க முயற்சி செய்.

லக்ஷ்மி அம்மாள்

கடிதத்தைப் படித்து முடித்த மன்னார் சாமிக்கு லக்ஷ்மி அம்மாள் சமயத்துக்கு வந்து மானத்தைக் காப்பாற்றிய தெய்வமாகவே தோன்றினாள். முதலாளி இல்லாத சமயம் அவர் வீட்டுக்குச் சென்று லக்ஷ்மி அம்மாள் காலில் விழுந்து நடந்ததைக் கூறிக் கண்ணீர் வடித்தான்.

முதலாளி வேலாயுதத்துக்கு மன்னார் சாமியின் மேல் அசையாத நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தாம் சாகும் தருணத்தில் கடையை அவனுக்கே கொடுத்து விட்டுச் சென்று விட்டார். லக்ஷ்மி அம்மாளும் கொஞ்ச நாட்களில் விண்ணுலகுக்குச் சென்று விட்டாள்.

மன்னார்சாமி லக்ஷ்மி அம்மாளைத் தெய்வமாக வைத்துப் பூஜிக்க ஆரம்பித்தான்.

* * *

கதையைச் சொல்லி முடித்தார் மன்னார்சாமி. "அந்த ஒரு நிமிடத்தில் என் மனம் எப்படித்தான் மாறிப் போச்சு... அந்த அம்மாள் சமயத்துக்கு வந்து உதவியிராவிட்டால், என்மேல் வேலாயுதத்துக்குத்தான் நம்பிக்கை ஏற்பட்டிருக்குமா? அவர் கடையான இதுதான் எனக்குக் கிடைத்திருக்குமா? நீங்களே சொல்லுங்கள்!" என்றார் மன்னார்சாமி கண்ணீர் மல்க.

## சபை நடுக்கம்!



"என்ன, இப்படி நடுங்குகிறீரே? மைக்கைப் பிடித்துக் கொள்ளுங்கள்."

இதென்ன வம்பாப் போச்சு! பந்தக்காலைப் பிடித்துக் கொள்ளுங்கள்!"

"ஐய்! ஐய்! பந்தக் காலை விட்டு விடும்! போதும்!"

ஒவ்வொரு இரவும் அதே கதை தான். குழந்தை நிம்மதியில்லாமல் அயர்ந்து போயிருந் தான். பசியிலே அழுதும் போகும். தாயார் ஆத்திரப்பட்டிருந்ததில் ஆச்சரியமொன்றுமில்லை.





ஒரு நாள் அவள் அண்டை வீட்டுக்காரி யின் யோசனையைக் கேட்டாள். அவள் சொன்னாள் "குழந்தை சந்தோஷமாயும் ஆரோக்கியமாயுமிருக்க அவனுக்கு உணவு கணக்காய் புகட்ட வேண்டும்" தவிர 'க்ளாக்ஸோ'வை வாங்கும்படி அவள் வற்புறுத்திச் சொன்னாள்.

'க்ளாக்ஸோ' ஒரு புஷ்டியான பால்-உணவு உறுதியான எலும்பும் பற்களும் வளர விடமின் 'டி'யும் ரத்தத்தை வளம்பெறச் செய்ய இரும்புச் சத்தும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.






அப்பாடா! குழந்தை எவ்வளவு விரைவில் வளர்ச்சியடைந்தான் என் பதைநீங்கள் நம்பவே மாட்டீர்கள். விரை வில் அவனுக்கு ஒரே ஆனந்தம் தான்! இரவு முழுவதும் நேர்த்தியாய் தூங்க லானான், நிதானமாய் எடையும் அதிகமாயிற்று.

Glaxo

'க்ளாக்ஸோ' குழந்தைகளின் மிகச் சுத்தமான பால் உணவு

D. 34

# பேரும் புகழும்



வி.எஸ். சுப்பையா

எப்பொழுதும் முருகேச முதலியார் முதல் வகுப்பு வண்டியில்தான் பிரயாணம் செய்வார். ஆனால் திருநெல்வேலி திருச்செந்தூர் ரயில் பாதையில் செல்லும் வண்டியில் முதல் வகுப்பு கிடையாதாகையால் வேறு வழி இன்றி இரண்டாவது வகுப்பு வண்டியில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

கையில் ஒரு தோல் பெட்டியைத் தவிர ஒன்றும் இல்லை. அதற்குள் திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தபுராணம் ஆகிய புத்தகங்கள் இருக்கும். பிரயாண காலத்தில் இவர் இவைகளில் ஏதாவது ஒன்றை எடுத்துப் படிப்பது வழக்கம்.

முருகேச முதலியாருடைய முருகபக்தி வெளி வேஷம் அன்று. உண்மையான ஈடுபாடு. முருகன் பேரைச் சொல்லி எத்தனையோ தான தருமங்கள் செய்திருக்கிறார். முருகன் எப்போதும் தமக்குத் தோன்றாத் துணையாக நின்று தன் காரியங்கள் யாவிலும் கைகொடுத்து உதவுகிறான் என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை. சிக்கலான விஷயங்களை அவர் முருகன் முன்னிலையிலேயே முடிவு கட்டுவது வழக்கம். சிறு விஷயமானால் தமது அரண்மனை போன்ற வீட்டிலுள்ள முருகன் திருவுருவத்துக்கு முன் பூ கட்டிப்போட்டு அவன் திருவுள்ளத்தைச் சோதிப்பார். பெரிய விஷயமானால் நேரே திருச்செந்தூரில் அவன் சன்னிதிக்கே போய் விடுவார். பெரிய விஷயம் சின்ன விஷயம் என்பது தொகையைப் பொறுத்தது. எந்தக் காரியமானாலும் பணத் தொகை மதிப்புக்கு மாற்றித்தான் அதைச் சீர் தூக்கிப் பார்ப்பது அவர் வழக்கம்.

இந்தச் சோதனைகளில் முருகன் என்றுமே அவரைக் கைவிட்டதில்லை. எதுவானாலும் முருகனைக் கலந்தாலோசியாது அவர் செய்ததுமில்லை.

முதன் முதலில் முருகேச முதலியார் இவ் விதம் முருகனிடத்தில் சோதனைக்காக நாடியது, அவர் இரண்டாவது தாரமாகச் செல்லம் மாளைக் கல்யாணம் செய்ய நினைத்தபொழுது.

முருகேச முதலியாருக்கு முதல் கல்யாணத்தினால் எவ்விதக் குறையுமில்லை, ஆண் குழந்தை இல்லை என்பதைத் தவிர. இதற்காக அவருடைய முதல் மனைவியே அவரை மணம் செய்து கொள்ளத் தூண்டினாள். ஆனால் முருகேச முதலியார் எளிதில் இடம் கொடுக்கவில்லை. இருக்கிற இரண்டு பெண் குழந்தைகள் போதும் என்ற திருப்தியோடு இருந்தார். ஆனால் முதல் மனைவி ஜோஸ்யம் கேட்ட பொழுது தாலியைப் பறித்து கொடுத்தால் நிச்சயம் அவள் வயிற்றிலும் மகன் உதிப்பான் என்று துலங்கியதால் அந்த அம்மாள் அவரை வற்புறுத்தினாள்.

இருவரும் திருச்செந்தூர் முருகன் சன்னிதிக்குப் போய்த் திருவுள்ளம் பார்க்க வேண்டுமென்று நினைத்து அங்கு போய்ப் பூ கட்டிப் போட்டுப் பார்த்தார்கள். முருகன் உத்தரவு கொடுத்து விட்டான். வெள்ளைப்பூவே கிடைத்தது.

கல்யாணமும் ஆயிற்று. எல்லாம் நினைத்த படியும் ஆயிற்று.

இதிலிருந்து முருகன் சம்மதம் கொடுக்கா விட்டால் அதைச் செய்வது இல்லை. கொடுக்கல் வாங்கல், வியாபார விருத்தி, நிலபுலம் வாங்குதல், எல்லாவற்றிலும் முருகன் முன்னிற்க வேண்டியதாயிற்று.

எது எப்படியானாலும், முருகேச முதலியார் தொட்டதெல்லாம் பொன்னாயிற்று. அதுவும் யுத்தகால வியாபாரத்தில் கொள்ளை கொள்ளையான லாபம். இவ்வளவுக்கும் நியாயமான வியாபாரம். பொய் புரட்டும் கிடையாது; கறுப்பு வெள்ளையும் இல்லை. ரொக்க முதலைக் கொடுத்து வாங்கி வியாபாரம் செய்ததிலேயே பிரமிக்கத் தகுந்த லாபம். கூட்டாளிகள் எல்லாம் தலையைச் சொறிந்த சமயத்தில் முருகேச முதலியார் முருக பூஜையை அமர்க்களமாக நடத்திக் கொண்டிருந்தார்.

தான தரும விஷயத்தில் மட்டும் முதலியார் தாம் கொடுக்கும் தொகையின் அளவுக்குப் புகழ் வருகிறதா என்று பார்ப்பார். வலதுகை

கொடுப்பது இடது கைக்குத் தெரியக் கூடாது என்ற பழமொழி அவருக்குத் தெரியாதோ,— இல்லை, கொடுப்பது எல்லோருக்கும் தெரிந்து தான் இருக்கட்டுமே என்று நினைத்தாரோ— பகிரங்கமாகவே கொடுத்தார். கொடுத்ததைப் பற்றி நான்கு பேர் பேசுகிறார்களா என்று கவனித்தார். அவர் மனத்தில் இதைப்பற்றி என்ன நினைத்தாரோ, தெரியாது. அவரை அறிந்தவர்கள், அவரை ஆஷாடபூதி என்று பேசிக் கொண்டார்கள். அவருடைய முருக பக்தியையே சந்தேகித்தார்கள்.

ஆனால் அவர்கள் எல்லோரும் அவரை அடுத்து நன்கொடை கேட்க மட்டும் தவறிய தில்லை. அதற்கெல்லாம் முருகேச முதலியார் ஓரளவு கொடுக்கவும் தவறியதில்லை. "ஏதோ முருகன் என் கையில் கொடுத்துக் 'கொடு' என்று சொல்லுகிறான், கொடுக்கிறேன். இனி மேல் வாங்கிக் கொள்கிறவர் பாடு முருகன் பாடு" என்று சொல்லுவது வழக்கம். வாங்கிக் கொள்பவர்கள் அநேகர் அதைச் சரியாகச் செலவழிப்பதில்லை என்பது அவருடைய ஐயப்பாடு.

இந்தச் சூழ்நிலையில் அவருடைய நண்பர்கள் உதவியோடு ஒருவர் அனாதை விடுதி ஒன்றைக் கட்ட நிதிதிரட்டும் கோரிக்கையோடு பிச்சைப் பாத்திரத்தை முதன் முதலில் அவரிடம் வந்து நீட்டினார்.

முருகேச முதலியாருக்குப் பெருத்த சந்தேகம். தாம் கொடுக்கும் பண அளவுக்குத் தமக்குப் புகழ் கிடைக்குமா, அல்லது கும்பலில் கோவிந்தா சமாசாரமாகி விடுமா என்பது அவருடைய கவலை. "கொஞ்சம் பொறுத்து வாருங்கள். பண நிலைமை கொஞ்சம் கைக்கு வரட்டும்" என்று ஒரு பெரிய பொய்யைச் சொல்லி அனுப்பினார்.

'இந்தத் தர்ம காரியத்துக்குப் பண உதவி செய்ய வேண்டியதுதான்' என்றார்கள் நண்பர்கள் எல்லோரும்.

"உங்கள் அந்தஸ்துக்கு, குறைந்தது பத்தாயிரம் ரூபாயாவது கொடுக்கலாம்" என்றார் ஒரு நண்பர்.



"விடுதியில் ஒரு பக்கத்தைக் கட்டி 'முருகேச முதலியார் பகுதி' என்று பேர் வைக்கலாமே!" என்றார் இன்னொருவர்.

எல்லாவற்றுக்கும் முருகனிடமே கேட்டு விடுவது என்றுதான் திடீரென்று முதல்நாள் திருச்செந்தூருக்குப் புறப்பட்டார்.

திருநெல்வேலி ஜங்ஷனில் வண்டிமாறி இரண்டாவது வகுப்பு வண்டியில் உட்கார்ந்திருந்த முதலியார், கந்தர் அலங்காரத்திலுள்ள ஒரு பாடலைப் படித்த வண்ணம் மெய்மறந்த நிலையில் இருந்தார்.

அவர் இருந்த வண்டியின் ஜன்னல் அருகில் ஒருவன் வந்தான். நாட்டுப் புறத்துவாசி என்று அவன் தோற்றத்திலே தெரிந்தது. அவன் கையில் ஒரு சிறு பையனைப் பிடித்துக் கொண்டிருந்தான்.

"ஐயா..."

முருகேச முதலியார் புத்தகத்தை மூடி விட்டு ஜன்னலின் வழியாக எட்டிப் பார்த்தார்.

"ஐயா, ஒரு உதவி."

"இந்தப் பையன் இங்கே நடுத் தெருவில் நின்று அழுது கொண்டிருந்தான். இவனுடைய தாய் தகப்பன் தவறுதலாக இவனை இங்கே விட்டு விட்டுப் போயிருக்கிறார்கள். அவனைக் கேட்டால் கல்லூர் என்று சொல்லுகிறான்" என்றான்.

"ஆமாம், என்னை அதற்கு என்ன செய்யச் சொல்லுகிறாய்!"

"இவனை இவனுடைய தாய் தந்தையர்களிடம் சேர்க்க நீங்க உதவி செய்ய வேணும். என் கையில் போதிய பணம் இல்லை. இல்லாவிட்டால் கேட்க மாட்டேன்" என்றான் அந்தக் கிராமப் பேர்வழி.

இந்தமாதிரி சிறு குழந்தைகளைக் காட்டி காசுக்காகப் பிச்சை எடுக்கும் வழக்கம் ஊரில் மலிந்து விட்டது என்பது அவர் எண்ணம். ஏதாவது பணம் கொடுக்கலாமா வேண்டாமா என்று எண்ணினார்—தான் அப்படி ஒரு ஐந்தோ பத்தோ பணம் கொடுத்தால் அதைப் புகழவோ பத்திரிகையில் போடவோ யாரும் அங்கு கிடையாது அல்லவா!

இவ்வாறு எண்ணியபடியே, "நீ யாரப்பா!" என்று அவனைக் கேட்டார்.

"நான் யாரு ஐயா. யாரோ ஒரு வழிப் போக்கன். நீங்கள் கொடுக்கும் பணத்தில் ஏதாவது மீதம் இருந்தால் அதில் நான் தம்பிடியும் எடுத்துக் கொள்ள மாட்டேன். அதை உங்கள் பேரைச் சொல்லித் தர்மத்துக்குச் செலவழித்து விடுகிறேன்" என்றான்.

"என் பேரைச் சொல்லித் தர்மத்துக்கு எப்படிச் செலவழிக்க முடியும்! என் பேர் உனக்குத் தெரியுமா!"

"யாரோ ஒரு மகராசன் கொடுத்தார். அவரும் அவர் குலமும் தழைக்கட்டும் என்று சொல்லுவேன்" என்றான்.

முருகேச முதலியார் யோசித்தார். தன் பேரைத் திட்டவட்டமாகச் சொல்லுவதிலும், யாரோ ஒரு மகராஜன் என்று சொல்லுவதிலும் வித்தியாசம் இருக்கிறதா என்று யோசித்தார்.

நிறைய வித்தியாசம் இருக்கிறது. பட்டணம் முருகேச முதலியார் கொடுத்தார் என்பதிலும் யாரோ ஒரு மகராசன் கொடுத்தார் என்பதிலும் மலையளவு வித்தியாசம் இருக்கிறது என்று அவர் உள்ளத்தில் பட்டது.

இதற்குள் வண்டி புறப்பட்டுவிட்டது.

ஊரில் சிறு குழந்தைகளைக் காட்டிப் பணம் பறிக்கும் வழக்கம் அதிகமாகி விட்டது.

அனுதை விடுதி கட்டும் ஆசாமிதான் என்ன! ஆயிரம் பத்தாயிரமாகப் பணத்தை வசூலித்து ஏப்பம் விடப் போகிறார். அந்த ஆசாமிக்கும் இதோ ஜங்ஷனில் நின்று கொண்டு ஒரு பையனைக் காட்டிப் பணம் பறிக்கும் கிராமப் பேர்வழிக்கும் உண்மையில் ஏதாவது வித்தியாசம் உண்டா என்றால் இல்லைதான் என்று எண்ணமிட்டவராய் மீண்டும் கந்தர் அலங்காரப் பாடலில் மனத்தைச் செலுத்தினர்.

*　　　*　　　*

பகல் இரண்டு மணி சுமாருக்கு வண்டி திருச்செந்தூரை அடைந்தது. ஒரு மாட்டு வண்டியில் கோயிலை அடைந்தார். அங்கு வழக்கம்போல் குளித்து ஆடை மாற்றிக் கொண்டு கோயிலுக்குள் போனார்.

அங்கு வந்தால் அவருக்கு என்னவோ விவரிக்க முடியாத அளவில் மன அமைதி ஏற்பட்டு விடும்.

கடலிலிருந்து ஜிலு ஜிலுவென்று பூந்தென்றல் வீச ஆரம்பித்தது. அவரைக் கண்டதும் பூஜைக் காரியங்களில் அவருக்கு உதவியாக இருக்கும் அடைக்கலமுத்து எதிர்கொண்டழைத்தான். பூஜைக்கு என்ன என்னவெல்லாம் வாங்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு போனான்.

வழக்கம்போல் கோயிலை வலம் வந்தார். பல கோணங்களில் கோபுர அழகைக் கண்டு களித்தார். இதோ இந்தத் திருப்பத்திலிருந்து கோபுரத்தைப் பார்க்கும் போதுதான் அவர் உடல் புல்லரிப்பது வழக்கம். அதே நிலையில் இன்று சற்று அதிக நேரத்தை எடுத்துக் கொண்டார். அவர் வலம் வந்து கோயிலுக்குள் சென்று முருகன் திருமுன்னே அடைந்த பொழுது கந்தரேச குருக்கள் தென்பட்டார். வழக்கம் போல் உபசரித்தார்.

கந்தரேச குருக்களுக்கு முருகேச முதலியாரை வெகு நன்றாகத் தெரியும். என்ன காரணத்துக்காக அவர் அடிக்கடி அங்கு வருகிறார் என்பதும் தெரியும்.

கந்தரேச குருக்கள் அவர் முகத்தைப் பார்த்தார். முருகேச முதலியார் குறிப்பறிந்து சொன்னார்: "குருக்களே, மிக முக்கியமான விஷயம். ரூபாய் பத்தாயிரத்தைப் பற்றியது. எங்கள் அப்பன் என்ன சொல்லுகிறான் என்று கேட்டுப் போக வந்திருக்கிறேன்."

"அதற்கென்ன, பேஷாய்க் கேட்டு விடுவோம். இஷ்டமிருந்தால் சரி என்று சொல்லட்டுமே."—இது குருக்கள் சொன்னது.

ஏதோ உப்பு புளி மிளகாய் சமாசாரம் போல இருவரும் பேசிக் கொண்டார்கள். ஆனால், இருவருமே முருகனிடத்தில் நீங்காத, மாறாத அன்பு கொண்டவர்கள்.

"ஆனால் இப்பொழுதே கேட்கவேண்டுமோ! சற்றுப் பொறுக்கலாமா! தாங்கள் எப்போது பட்டணம் புறப்பட வேண்டும்! இன்று இரவுத் தங்கல் உண்டா!"

"ஏதோ நினைத்தேன்; ஓடி வந்து விட்டேன். குருக்களே, ஆறு இருபது வண்டிக்குப் புறப்பட முடிந்தால் நல்லது. இல்லை, முருகன் காலடியில் ஒரு இரவு தங்கி விட்டு நாளை பதினொன்று ஐம்பது வண்டிக்குப் புறப்படுகிறேன். ஏன் என்ன சமாசாரம்!"



"இன்று மாலை நடக்கும் விசேஷ பூஜையில் கேட்கலாமே என்றுதான்."

"ஓ பேஷாய். அப்படியானால் அடைக்கலமுத்துவிடம் ஒரு விசேஷ மாலையும் கட்டச் சொல்லுகிறேன்."

"அப்படியே ஆகட்டும்" என்றார் கந்தரேச குருக்கள்.

முருகன் சந்நிதியில் நெடுஞ்சாண் கிடையாய் ஒரு கும்பிடு போட்டு விட்டு முதலியார் கடலைப் பார்த்து அனுபவிக்க வெளியில் வந்தார்.

கடலை ஒட்டியுள்ள அந்த மேடை முதலியாருக்கு மிகவும் பிடித்தமான இடம். துண்டைக் கீழே விரித்து அதன்மேல் உட்கார்ந்தார். கந்தரேச குருக்கள் வந்து அழைத்துப் போவதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

மெல்லிய பூங்காற்று அவருக்கு இதத்தைக் கொடுத்தது. கடல் அலைகளின் மெல்லிசை முருகன் புகழைப் பாடுவதுபோலக் கற்பனை செய்து கொண்டார். சிறிது நேரத்தில் கண்ணயர்ந்து விட்டார் அவர்.

ஆனால் விரைவில் கந்தரேச குருக்கள் வந்து அவரைத் தட்டி எழுப்பி, "முருகன் இன்னும் கோயில் வந்து சேரவில்லை. இன்று பூ கட்டிப் பார்ப்பது முடியாத காரியம்" என்றார்.

"என்ன குருக்களே! என்ன சொல்லுகிறீர்! முருகன் இன்னும் கோயிலுக்கு வரவில்லையா!"

"ஆமாம், இப்பொழுதுதான் சமாசாரம் கிடைத்தது. திருநெல்வேலியில் ஒரு காரியத்துக்காகத் தங்கி விட்டான். நீங்கள் நாளைக் கட்டாயம் பட்டணம் போகவேண்டுமானால் திருநெல்வேலிக்குப் போய்க் கேட்டுவிட்டுப் போங்கள்" என்றார் குருக்கள்.

"திருநெல்வேலியில் அவனை நான் எந்த இடத்தில் தேடுவேன்!" என்று மலைத்தார்.

"ஏன், நானும் உங்களுடன் வருகிறேன். அவனை நான் இனங்காட்டுகிறேன்" என்றார் கந்தரேச குருக்கள்.

"சரி புறப்படுங்கள். இவ்வளவு தூரம் வந்து விட்டு அவனைப் பார்க்காமல் போவதில்லை" என்று சொல்லிய வண்ணம் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பினார், முதலியார் குருக்கள் பின்தொடர.

இருவரும் குருக்களுக்குத் தெரிந்த ஒருவரிடம் கார் ஒன்றைக் கேட்டு வாங்கிக்கொண்டு வேகமாகப் புறப்பட்டார்கள். அறுபது, அறுபத்தஞ்சு மைல் வேகத்தில் கார் திருநெல்




ஒருவர்:—நீங்க என்ன விஜயவாடா போகப் போகிறதாக ஊரில் எல்லாருக்கும் சொல்லி விட்டுக் கோடைக்கானலுக்கு டிக்கட் வாங்குகிறீர்களே!

பிறகு:—கோடைக்கானலுக்கு என்று சொன்னால் அவர்கள் உடனே பொறாமைப் பட ஆரம்பிப்பார்கள். அதற்குத்தான்!

---

வெளியை நோக்கிப் பறந்தது. வெகு விரைவில் திருநெல்வேலி ஜங்ஷனை அடைந்தது.

கார் நின்றதும் குருக்கள் முதலியாரை ஜங்ஷனுக்குள் அழைத்துச் சென்று, "பார்த்தீர்களா முருகன் இங்கிருப்பதை" என்றார்.

முதலியார் உடல் மயிர்க் கூச்செறிந்தது. 'அந்தக் கிராம வாசியா முருகன்! அந்தச் சிறுவனைக் கையிற் பிடித்த வண்ணம் நின்று கொண்டிருக்கிறானே, அவனா நான் தேடிவந்த தெய்வம்!' என்று நினைத்தார்.

முதலியார் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கும்பிட்டார். அவன் பாதத்தைக் கண்ணீரால் நனைத்தார். அறியாமல் செய்த பெரும் பிழையை மன்னிக்கும்படி கதறினார்.

சுந்தரேச குருக்கள், 'எழுந்திருங்கள், எழுந்திருங்கள்' என்று சொல்லியும் கேட்கவில்லை.

பின்பு சற்று உரக்க, "முதலியார்வாள்! பூஜைக்கு நேரமாகி விட்டது. எழுந்திருங்கள்" என்று சொன்ன பிறகுதான் அவர் தூக்கம் கலைந்து திடுக்கிட்டு எழுந்தார்.

சுற்றுமுற்றும் ஒரு தரம் பார்த்தார். சுந்தரேச குருக்கள்தான் அது. கடல் அலையொலி காதில் விழுந்து கொண்டிருந்தது. தான் இருப்பது திருச்செந்தூர்தான்! திருநெல்வேலி ஜங்ஷன் இல்லை!!

மௌனமாகக் குருக்களுடன் சென்றார் முதலியார். பூஜைக்குரிய பொருள்களோடு அடைக்கல முத்து அங்கு காத்துக் கொண்டிருந்தான்.

"குருக்களே! முருகனுக்கு மாலையைச் சாத்துங்கள். எனக்குப் பிரசாதம் மட்டும் கொடுங்கள். பூ கட்டிப் போட்டுப் பார்க்க வேண்டாம்" என்றார்.

குருக்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனால் ஏன் என்று கேட்கவில்லை.

பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டு மாலை ஆறு மணி இருபது நிமிஷத்துக்குப் புறப்படும் வண்டியைப் பிடித்துத் திருநெல்வேலிக்கு வந்தார். மறுநாள் சென்னை திரும்பினார்.

சென்னை அடைந்தும் முதலியார் இன்னும் பழைய நிலை அடையவில்லை.

மனைவிமாரும் நண்பர்களும் "என்ன சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டுப் போனீர்கள்!" என்று கேட்டார்கள். அவர் ஏதேதோ பதில் சொன்னார்.

மறு நாள் அனாதை விடுதிக்காரர் அவரைப் பார்த்துப் போக மட்டும் வந்தார். முதலியார் அவரைப் பார்த்ததும் அன்புடன் உபசரித்து அமரச் சொன்னார்.

"ஒன்றுமில்லை. நீங்கள் பணம் கொடுக்கும் போது கொடுங்கள். இப்பொழுது சும்மா பார்த்து விட்டுப் போகத்தான் வந்தேன்" என்றார் அனாதை விடுதிக்காரர்.

"நல்ல வேளை! யாரும் இல்லாத சமயம் வந்தீர்கள். உங்கள் அனாதை விடுதியை எப்போது கட்டப் போகிறீர்கள்!"

"போதிய பணம் வசூலானதும் கட்டடம் ஆரம்பிக்க வேண்டியதுதான். பிளான் எல்லாம் தயார். குழந்தைகளையெல்லாம் அதுவரையில் வாடகை வீட்டில்தான் வைத்துப் பராமரித்து வருகிறேன். இறைவன் எப்போது வழிகாட்டப் போகிறானோ!—தங்களைப் போன்ற......"

"அது சரி ஐயா, எவ்வளவு பணம் பிடிக்கும், கட்டடம் முழுவதும் கட்டி முடிக்க!"

"அதிகம் வேண்டாம் ஐம்பதினாயிரம் ரூபாய் இருந்தால் போதும்."

"சரி இந்தாருங்கள். ஒரு வெற்றுச் செக்குத்தான். என் கையெழுத்தைப் போட்டுக் கொடுத்திருக்கிறேன். தங்களுக்குத் தேவையான தொகையை அதில் போட்டுப் பணத்தைப் பாங்கியிலிருந்து பெற்றுக் கொள்ளுங்கள்" என்றார் முதலியார்.

அனாதை விடுதிக்காரர் செக்கை வாங்கிக் கொண்டு 'ஆ'வென்று திறந்த வாயை மூடாமல் நின்று கொண்டிருந்தார்.

பின்பு அவருடைய திகைப்பு ஓரளவு தீர்ந்த சமயம்.

"உங்களுக்கு நான் எந்தவிதமான உபசாரத்தைச் சொல்வதென்று தெரியவில்லை. 'முருகேச முதலியார் அனாதை விடுதி' என்று பெயரிட்டு வாழ்த்துவதைத் தவிர வேறு என்ன செய்யப் போகிறேன்."

"இல்லை. நான் இந்தச் செக்கை ஒரே ஒரு நிபந்தனையோடு கொடுக்கிறேன்."

அனாதை விடுதிக்காரர் அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதற்காகக் கை கட்டி ஆவலுடன் காத்து நின்றார்.

"'ஆண்டி விடுதி' என்று பெயரிட வேண்டும், நீங்கள் கட்டும் கட்டடத்துக்கு. இந்தப் பணம் நான் கொடுத்ததாக வெளியில் யாருக்கும் தெரியக் கூடாது. அவ்வளவுதான்" என்றார் முதலியார் தீர்மானமாக.



## வருஷத்திற்கு வருஷம், முன்னைவிட, மேலும் மேலும்
## அதிகப் படியான மோட்டார்காருடையவர்கள்

# ஸ்டாண்டர்ட்

## பாட்டரிகளையே வாங்குகின்றனர்

### ஏன் என்றால் . . .

அவையாவும் கவினமுறையில், சிறந்த விஞ்ஞான நிபுணரின் கட்டுப்பாட்டில் ஒரு நல்ல பாட்டரிக்கு இன்றியமையாத நிபந்தனைகளின்படி எல்லா பாகங்களையும் கொண்டு அமைக்கப்படுகின்றன. நாங்கள் அமோகமான அளவு பாட்டரி தயாரிப்பு செய்வதால் எங்கள் அமைப்புகளை இன்றைய நிபந்தனைகளின்படி வைத்திருக்க இயலுகின்றது.

#### சமீபகாலத்து—தொழில் நுணுக்கம்

உலகிலேயே சிறந்த அநுபவம் வாய்ந்த பாட்டரி தயாரிப்பாளர்களின் முன்னணியில் நிற்கும் ஸ்வீடன் தொக்துட்டுடர்ஸ் அவர்களுடன் நாங்கள் 'டெக்னிகல்' தொடர்பு கொண்டிருப்பதால் அவர்களின் தொழில் நுணுக்கங்களையும், சொந்த 'பேடண்டு'களையும் நாங்கள் உபயோகிக்க முடிகிறது. நீங்கள் வாங்கும் எங்களின் ஒவ்வொரு பாட்டரியும் எங்களிருவர்களின் கூட்டு அநுபவத்தின் சின்னம் என்று கூறுவது மிகையல்ல. நியாயமான விலையில், எங்கும் இவை விற்பனை, சர்வீஸ், செய்யப்படுகின்றன.



பற்பலவிதமான கார்கள் மற்றும் டிரக்குகளில் முதல் ஆரம்பத்தில் அமைத்தவை பெரும் பாலும் ஸ்டாண்டர்ட் பாட்டரிகளே.

ஸ்டாண்டர்ட் பாட்டரீஸ் லிமிடெட்
43, பெர்பெல்ஸ்ட்ரீட், போர்ட், பம்பாய் 1

இந்தியாவில் லெட்-ஆஸிட் பாட்டரிகள் தயாரிப்பவர்களில் மிகப் பெரிய சுதேசி கம்பெனி

வினியோகஸ்தர்கள்: சுந்தரம் மோட்டார்ஸ் லிட்., மதராஸ் 6. மதராஸ் ஆட்டோ ஸெர்வீஸ் லிட்., மதராஸ், பங்களூர். டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிட்., மதுரை. மற்றும் கிளை ஆபீஸ்கள்.

# ஐந்து ரூபாய் பட்ஜெட்

**ஸோமாஸ்**

“உங்களுக்குக் கிடைக்கப் போகும் ஐந்து ரூபாய் சம்பள உயர்வை என்னிடம் ஒவ்வொரு மாதமும் கொடுத்துவிட வேண்டும்!” என்றாள் பத்மா. அவள் ஒரு மிஸஸ் என். ஜி. ஓ.

“ஏன், உனக்கு என்னத்துக்கு மாசம் ஐந்து ரூபாய்?” என்று கொஞ்சம் கம்மிய குரலில் கேட்டான் பரமசிவம்.

“எனக்கு இல்லை, அந்தப் பணம். மாதம் ஐந்து ரூபாய் தருவதாகச் சொல்லி இன்று முப்பது ரூபாய்க்கு ஒரு புடவை வாங்கினேன், அந்தப் புடவைக்காரனுக்குக் கொடுக்கத்தான்!” என்றாள் பத்மா.

“பரமசிவம், நான் சொல்லுவதைக் கொஞ்சம் கேளேன். நாலாவது வீட்டு மாடிப் போர்ஷன் காலியாகிறது. முப்பத்தைந்து ரூபாய் வாடகை. ஐந்து ரூபாய் நாம் அதிகமாகக் கொடுக்கும்படியாக இருக்கும். ஆனால் நல்ல காற்று. அந்தக் காற்றினாலே நமக்கு டாக்டர் செலவு ரொம்பக் குறையும்!” என்றார் பரமசிவத்தின் தகப்பனார்.



அப்பொழுது பரமசிவத்தின் தங்கை சரளா ஓடி வந்தாள்.

“அண்ணா, நான் இந்த மாதம் நடன வகுப்பிலே சேரப் போகிறேன். அந்த ஐந்து ரூபாயை எனக்குக் கொடுத்து விடு!” என்றாள் சரளா.

“அப்பா, பரமசிவம்! திருப்பதி வேங்கடாசலபதிக்கு உனக்காக ஒரு முறை வேண்டிக் கொண்டேன். அந்தப் பிரார்த்தனை ரூபாய் ஐந்தையும் இந்த மாதம் வரப் போகும் சம்பள உயர்வைக் கொண்டு செலுத்தி விடு!” என்றாள் தாயார்.

இத்தனை பேர்கள் சொன்ன இவ்வளவு விஷயங்களையும் கேட்டுக் கொண்டிருந்த பரமசிவத்துக்குத் தலை 'கிர்' என்று சுற்றியது. 'அட, பரமசிவம்! ஒரு ஐந்து ரூபாய்க்கு இவ்வளவு செலவா?' என்று எண்ணிச் சிரிப்பதா, அழுவதா என்று தெரியாமல் தவித்தான். ஆனால் அவனை அப்படியே தவித்துக் கொண்டிருக்கும்படி விட்டுவிடாமல் தடுத்தாட் கொண்டாள், அவன் தமக்கை சௌந்தரம்.

“பரமசிவம், நான் சொல்லுவதைக் கொஞ்சம் கவனமாய்க் கேளு. குழந்தைக்குக் கட்டி மருந்து வாங்கணும். அந்த ஐந்து ரூபாயிலே அதை வாங்கிக் கொடுத்து விட்டாயானால் ரொம்பவும் சௌகரியமாயிருக்கும்” என்றாள்.

யாருக்கு என்ன பதில் சொல்லுவதென்றே பரமசிவத்துக்குப் புரியவில்லை. அவன் மத்திய சர்க்கார் இலாக்காவில் சேவை செய்யும் ஒரு சாதாரணக் குமாஸ்தா. சர்க்கார் கொடுத்திருக்கும் ஐந்து ரூபாய் சம்பள உயர்வை, மழையின் வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் சாதகப் பறவையின் நிலையில், எதிர் பார்த்துக் கொண்டிருந்தான் பரமசிவம்.

மாதம் முடிந்தது. அடுத்த மாதம் பிறந்தது. அன்று மாலை ஆபீஸிலிருந்து வந்தபோது பரமசிவத்துக்கு அவன் வீட்டில் அமோகமான வரவேற்புக் கிடைத்தது. முதலில் புன்முறுவலுடன் அவனை எதிர்கொண்டு அழைத்தவள் அவனது சகதர்மிணி பத்மாதான். அடுத்தபடி அவன் அம்மாவும் அப்பாவும் அவன் சொல்லப் போவதைக் கேட்க மிகவும் ஆவலோடு வந்தார்கள். பிறகு அவன் தங்கை சரளா ஒரு அபிநயத் தோற்றத்துடன் அவன் எதிரே வந்து நின்று கொண்டாள். அவளைத் தொடர்ந்து அவனது தமக்கையும், குழந்தையும் கையுமாக வந்து நின்றாள்.



பரமசிவம் ஒரு முறை எல்லாரையும் பார்த்து விட்டு, தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். பிறகு கனீரென்று பேச ஆரம்பித்தான்.

“அப்பா, அம்மா, பத்மா, சரளா! எல்லோரும் கேளுங்கள். உங்களெல்லோருக்கும் ஒரு சிரமமும் வைக்காமல், இந்த மாதம் அதிகப்படியாகக் கிடைத்த ஐந்து ரூபாய்க்கு நல்ல செலவு ஏற்பட்டுவிட்டது” என்றான்.

“என்ன, என்ன?” என்று எல்லோரும் கேட்டுக் கொண்டே அவனைச் சூழ்ந்து நின்று கொண்டார்கள்.

“போனமாதம் ஆபீஸ் குமாஸ்தா ஒருவருக்குக் கல்யாணம் நடந்தது. எல்லோரும் அவர்களாலான தொகையைப் போட்டு நல்ல பரிசாக அவருக்கு வழங்கினோம். நான் ஐந்து ரூபாய் போட்டேன். ஆபீஸ் அக்கௌண்டண்ட் இந்த மாதச் சம்பள உயர்வை அந்தக் கல்யாண நிதிக்குப் பிடித்து விட்டார். அந்தத் தொகை ஒரு நல்ல காரியத்துக்கு உபயோகமாகி விட்டது!” என்றான் பரமசிவம்.

அதற்குப் பிறகு பரமசிவத்தின் வீட்டில் பூரண அமைதி நிலவியது.



மகேசபுரத்தில் இரண்டு துஷ்டர்கள் பக்கத்துப் பக்கத்து வீடுகளில் குடியிருந்தார்கள். வெளியூரில் இவர்களுடைய கொள்ளையும் மோசமும் முடிந்து விட்டன. இருவரும் ஒருவரையொருவர் மிகவும் சந்தேகித்துக் கொண்டு ஒரே தெருவில் வசித்து வந்தார்கள்.

"என்றைக்கோ ஒருநாள் இந்தக் கிழக்கு வீட்டுக்காரன் நம் வீட்டில் கன்னம் வைத்துத் திருடி விடுவான்" என்றாள் மேற்கு வீட்டுக்காரன் மனைவி.

"என்றைக்காவது ஒரு ராத்திரி இந்தப் பொல்லாதவன் நம்முடைய வீட்டுக்கு நெருப்பு வைத்து விடுவான்" என்றாள் கிழக்கு வீட்டுக்காரி.

மனைவிகள் பேச்சைக் கேட்டு இரு துஷ்டர்களும் தடியும் துப்பாக்கியும் சேகரித்துக் கொண்டு எப்போதும் பயந்து கொண்டே இருந்து வந்தார்கள்.

"இந்தத் தடியும் துப்பாக்கியும் இருந்து என்ன பயன்? பக்கத்து வீட்டுக்காரப் பயல் அதிகமாக வைத்துக் கொண்டிருக்கிறான். தவிர அவன் தடியன்களை வைத்திருக்கிறான். உங்கள் சாமர்த்தியம் அவர்களுடைய துஷ்டத்தனத்துக்கு ஈடாகாது" என்றாள் மேற்கு வீட்டுக்காரி.

"அதற்கு என்ன செய்யலாம்?" என்றான் அவளுடைய புருஷன்.

"நான் ஒரு பாம்பாட்டியைப் பார்த்துப் பேசி வைத்திருக்கிறேன். அவன் ஒரு விஷப் பாம்பைப் புட்டியில் போட்டுக் கொடுக்கிறேன் என்று சொல்லியிருக்கிறான். அதை வாங்கி வைத்தால் நாம் பிழைப்போம். பக்கத்து வீட்டுக்காரன் நம்மை ஏதேனும் செய்தால் பாம்பை அந்த வீட்டில் விட்டுவிடலாம்" என்றாள்.

"நல்ல ஏற்பாடு" என்றான் புருஷன். "ஆனால் பாம்பு நாம் சொன்னபடி கேட்குமா?" என்று விசாரித்தான்.

"அதற்கு நாம் தினமும் கொஞ்சம் உணவு போட்டுக் கொண்டு வந்தால் அது நம்மை ஒன்றும் செய்யாது என்று பாம்பாட்டி சொல்லுகிறான்" என்றாள்.

"நம்பலாமா?" என்றான்.

"நம்பலாம்" என்றாள்.

அப்படியே செய்தார்கள்.

பாம்பாட்டி கெட்டிக்காரன். அவன் இன்னொரு புட்டியில் இன்னொரு விஷப் பாம்பை வைத்துக் கிழக்கு வீட்டுக்காரனுக்கும் ரகசியமாகக் கொடுத்தான்.

சில நாள் கழித்து சங்கதி இருவருக்கும் தெரிந்து போயிற்று. பிறகு ஊருக்கெல்லாமே தெரிந்து போயிற்று. "இப்படி இவர்கள் விஷப் பாம்பு வைத்திருக்கிறார்களே. இது ஊருக்கே அபாயமல்லவா?" என்று ஊரார் சிலர் ஆட்சேபித்தார்கள்.

ஆனால் அந்தத் துஷ்டர்கள் ஊராரின் ஆட்சேபணையைப் பொருட்படுத்தவில்லை. "எங்களுக்குள்ள பயம் எங்களுக்குத்தான் தெரியும். ஊராருக்கு என்ன தெரியும்? நாம் பாம்பை விட முடியாது" என்றான் மேற்கு வீட்டுக்காரன்.

"இரண்டு பேரும் பாம்புகளைப் புட்டியோடு எரித்து விடலாம்" என்றான் கிழக்கு வீட்டு ஆசாமி.

"இந்த மோசக்காரனை யார் நம்புவார்கள்? அவன் எத்தனை பாம்புகள் எத்தனை புட்டியில் வைத்திருக்கிறானோ யாருக்குத் தெரியும்?" என்றான் மேற்கு வீட்டுக்காரன்.

"அவன்தானே ஆரம்பித்தான்" என்றான் கிழக்கு வீட்டுக்காரன்.

ஊரார் பஞ்சாயத்துப் போட்டார்கள். ஒன்றும் முடிவாகவில்லை. கள்ளுதான் ஏராளமாய்ச் செலவாயிற்று.

பழையபடியே ஊரெல்லாம் பயந்து கொண்டிருந்தது. இரண்டு வீட்டுக்காரர்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதேயில்லை. இரவில் அவர்களுக்கு உறக்கமேயில்லை.

"யாராவது ஒருவர் பாம்பைக் கூடையுடன் முதலில் நெருப்பில்போட்டு எரித்து விட்டால், இந்த பயம் தீரும். மற்றவனும் அப்படியே செய்வான். ஏன் தூக்கமில்லாமல், சுகமில்லாமல் வேண்டாத துயரத்தில் சிக்கியிருக்கிறீர்கள்?" என்றார் ஊருக்கு வெளியே இருந்து வந்த ஒரு சாமியார்.

"இந்த ஆண்டிக்கு என்ன தெரியும்? இந்தத் துஷ்டனுடைய நடவடிக்கை எங்களுக்கல்லவோ தெரியும்?" என்றாள் மேற்கு வீட்டுக்காரி.

# அணுகுண்டைப் பற்றி அல்ல

"நாம் நம்முடைய பாம்பை எரித்து விட்டபின் அந்தக் கிழக்கு வீட்டுக்காரன் தன்னுடைய பாம்பை நம் பேரில் விட்டு விடுவது நிச்சயம்" என்றாள் அவள்.

கிழக்கு வீட்டுக்காரி, "சரி, இப்படியே கிடக்கட்டும். பார்க்கலாம். என் வீட்டுக்கு நெருப்பு வைத்துப் பார்க்கட்டும். பிறகு என் பாம்பை அவர்கள் வீட்டிற்குள் விட்டு விடுவேன். அதன் மேல் வேடிக்கை பார்க்கலாம்" என்றாள்.

"நெருப்பு வைத்து விட்டபின் நீ எங்கே போய்ப் பாம்பை விடுவாய்?" என்றான் புருஷன்.

"நெருப்பு வைக்க வருகிறானே இல்லையோ? அப்போதே முந்திக்கொண்டு நான் அந்த வீட்டுப் புழக்கடையில் புட்டியைத் திறந்து விடுவேன்" என்றாள்.

தூக்கம் என்னவோ இருவருக்கும் இல்லை.

"இந்தத் துஷ்டன் ஏதோ யோசனை செய்து வருகிறான். நாம் ஒன்றுக்கு இரண்டு பாம்பு வைத்தால் தேவலை" என்றாள் மேற்கு வீட்டுக்காரி.

பாம்பாட்டி வேண்டிய பாம்புகளைத் தந்தான். இருவருக்கும் தந்தான். அவனுக்கு நல்ல லாபம்.

ஊராருடைய பயம் அதிகரித்தது. "இத்தனை பாம்புகளைப் பல்லைப் பிடுங்காமல் ஊரில் வைத்துக் கொண்டிருந்தால் எப்போது என்ன ஆகுமோ?" என்று தாய்மார்களெல்லாம் பயந்தார்கள். அந்தத் துஷ்டர்களிடம் பேச ஊரில் ஆண் மக்களுக்குத் தைரியம் இல்லை.

இரு துஷ்டர்களுக்கும் பயம், கவலை, ராத்திரி உறக்கமில்லை. அவர்கள் மனைவிகளுக்கும் உறக்கமில்லை. ஊராருக்கும் பயம் ரொம்ப அதிகமாகப் போயிற்று.

வயல்களைக் கவனிப்பாரில்லை. தொழில்கள் எல்லாம் கெட்டுப் போச்சு. ஊரில் பஞ்சம் ஆரம்பித்தது. மாகாளியம்மன் கண்ணைத் திறந்தாள். வியாதி பரவிற்று. தேசம் பாழாயிற்று.






இப்போது ஆராய்ச்சிக்காரர்கள் குழி தோண்டி அங்கே ஒரு பெரிய நகரம் ஒரு காலத்தில் இருந்தது என்பதைக் கண்டு அதைப் பற்றிப் புதைபொருள் இலாகாவுக்குக் குறிப்புக்கள் அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள்.

# பர்மா ரமணி



அழ. வள்ளியப்பா

## 43. வாழ்க, வாழ்க!

லாரியைக் கண்டதும் ஓட்டம் ஓட்டமாகத் திரும்பி ஓடினார்களே முரடர்கள், அவர்கள் வெகு தூரம் சென்றுதான் நின்றார்கள். தாங்கள் எல்லோரும் திரும்பி வந்து விட்டோமா என்று சரி பார்த்துக் கொண்டார்கள். அப்போதுதான் சுப்பையாவைக் காணோம் என்பது தெரிந்தது. இதுவரையில் ஒரே அவசரத்திலும் குழப்பத்திலும் இருந்ததால், சுப்பையா தங்களோடு இருக்கிறானா இல்லையா என்றுகூட அவர்கள் பார்க்கவில்லை! பார்க்கவேண்டிய கட்டாயமும் அவர்களுக்கு ஏற்படவில்லை.

சுப்பையாவைக் காணோம் என்று தெரிந்த பிறகும், அவர்கள் அவன்மேல் சந்தேகப்படவில்லை. "சுப்பையா கெட்டிக்காரன். ஒளிந்து ஒளிந்து அவர்கள் பின்னாலேயே போய் விஷயத்தைத் தெரிந்து கொண்டு வந்துவிடுவான்" என்று சொல்லிவிட்டு மற்றவர்களை அழைத்துக் கொண்டு குகையை நோக்கிச் சென்றான் தலைவன்.

ஆனால், அந்தக் குகையில் அவர்கள் சிறிது நேரம்கூட இருக்கவில்லை. "இனி நாம் இந்தக் குகையில் இருந்தால் ஆபத்து நிச்சயம்! சுந்தரத்தையும் ரமணியையும் தூக்கிச் சென்றவன் நம்மைக் காட்டிக் கொடுத்து விடுவான்!" என்று எண்ணி அவர்கள் வேறொரு குகைக்குப் பணப்பெட்டி, சாமான்கள் முதலியவற்றுடன் புறப்பட்டு விட்டார்கள். ஆனால், போலீஸ்காரர்களா விடுவார்கள்? அவர்கள்தான் அந்தக் குகையைப் பற்றிச் சுப்பையா மூலமாகத் தெரிந்து வைத்திருந்தார்களே! ஆயுதம் தாங்கிய ஒரு பெரிய படையுடன் சப்-இன்ஸ்பெக்டர் புறப்பட்டுச் சென்று அந்தக் குகையை முற்றுகையிட்டார். முரடர்கள் மூவரும் தப்ப வழியில்லாது உடனே போலீஸாரிடம் சரண் அடைந்தார்கள்.

முரடர் கோஷ்டி பிடிபட்ட செய்தி மாந்தலே நகரில் ஒரு பெரிய பரபரப்பை உண்டாக்கி விட்டது. அவர்கள் பிடிபட்டதற்குக் காரணமே ரமணிதான் என்று மக்கள் பேசிக் கொண்டார்கள். இதனால், ரமணியின் புகழ் இன்னும் அதிகமாயிற்று. கதையைக் கேட்க மாந்தலே நகரத்துக் குழந்தைகள் எல்லோருமே திரண்டு வர ஆரம்பித்து விட்டார்கள்.

சித்தப்பா இறந்து போனதை நினைத்துச் சில சமயம் ரமணி வருத்தப் படுவான். ஆனாலும், கூட்டம் கூட்டமாக வரும் குழந்தைகளைக் காணும் போது அந்த வருத்தம் இருந்த இடம் தெரியாமல் ஓடி மறைந்துவிடும். குஷியாக அவர்களுக்குக் கதை சொல்ல ஆரம்பித்து விடுவான். அவன் சொல்லும் கதைகளைக் கேட்டுக் கேட்டுக் குழந்தைகள் ஆனந்தப் படுவார்கள். பெரியவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

ரமணி சொல்லும் கதைகளையெல்லாம் பத்திரிகைகளுக்கு எழுதி அனுப்பினால், நிச்சயம் வெளியிடுவார்கள் என்று அங்கு வரும் சில பெரியவர்கள் அடிக்கடி சொல்லி வந்தார்கள். சுந்தரத்தின் அப்பா தாமோதரமும் ரமணியிடம் இதைச் சொன்னார். சொன்னதோடல்ல; கட்டாயப் படுத்தி எழுதி அனுப்பவும் செய்தார். பர்மாவிலுள்ள சில தமிழ்ப் பத்திரிகாசிரியர்கள் ரமணியின் கதைகளுக்கு நல்ல வரவேற்பு அளித்தார்கள். அவனுடைய கற்பனைத் திறத்தைப் போற்றினார்கள். தங்கள் பத்திரிகைகளில் தொடர்ந்து வெளியிட்டு ஊக்கமளித்தார்கள். மூன்று மாதங்களில் சுமார் முப்பது கதைகளுக்கு மேல் பத்திரிகைகளில் வெளிவந்து விட்டன! எல்லாக் கதைகளுமே அற்புதமான

கதைகள். அந்தக் கதைகளைப் பாராட்டித் தினமும் நூற்றுக் கணக்கான கடிதங்கள் பத்திரிகாசிரியர்களுக்கு வர ஆரம்பித்தன.

ரமணிக்குப் பெயரும் புகழும் பெருகி வருவதைக் கண்ட சிற்சபேசனும், தாமோதரமும் ஒரு முடிவுக்கு வந்தார்கள். அந்த முடிவுப்படி இருவரும் ஆளுக்குப் பத்தாயிரம் ரூபாய் முதல் போட்டு ஒரு பதிப்பகத்தை ஆரம்பித்தார்கள். அதன் பெயர் 'ரமணி சுந்தர் பதிப்பகம்.' அதிலிருந்து ரமணியின் கதைகளையெல்லாம் புத்தகங்களாக வெளியிடுவதென்று தீர்மானித்தார்கள். முதல் புத்தகமாக ரமணியின் புகழ் பெற்ற 'கோமாளிக் குப்பன்' என்ற கதையை வெளியிட்டார்கள்.

ஆனால், ரமணி பர்மாவில் இருக்கிறான் என்பதும், முதலில் கதாசிரியனாக இருந்து இப்போது புத்தக ஆசிரியனாகி விட்டான் என்பதும் ஸ்ரீ முருகன் பால நாடக சபா மானேஜர் மதுரநாயகத்துக்குத் தெரியுமா? அவர் அடிக்கடி ரமணியை நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டேயிருந்தார். 'இப்போது ரமணி எங்கே இருக்கிறானோ! எப்படி இருக்கிறானோ!' என்பதே அவரது கவலை.



அன்று காலையில் நாடக சபாவிலுள்ள தம்முடைய அறையில் மதுரநாயகம் கவலையோடு உட்கார்ந்து கொண்டிருந்தார். அப்போது, அவர் முன்னால் சில கடிதங்களைக் கொண்டு வந்து வைத்தான் ஆபீஸ் பையன் சிங்காரம். அந்தக் கடிதங்களுடன் உறையோடு கூடிய ஒரு புத்தகமும் இருந்தது. உறையை அகற்றி விட்டுப் புத்தகத்தை எடுத்துப் பெயரைப் பார்த்தார். 'கோமாளிக் குப்பன்' என்ற பெயரைக் கண்டதும் அவருக்குச் சிரிப்பு வந்து விட்டது. 'வேடிக்கையான பெயராயிருக்கிறதே!' என்று கூறிக்கொண்டே உள்ளே பார்த்தார். முதல் பக்கத்தில், 'எழுதியவர் – பர்மா ரமணி' என்று இருந்தது. உடனே அவர், "என்ன! பர்மா ரமணியா! அது யார்?" என்று ஆச்சரியத்தோடு அடுத்த பக்கத்தைப் புரட்டினார். அங்கே ஒரு கட்டம் கட்டி, அந்தக் கட்டத்தின் நடுவே, "அனாதையாக இருந்த எனக்கு ஆறுமாத காலம் ஆதரவளித்து அன்போடு வளர்த்து வந்த சென்னை ஸ்ரீ முருகன் பால நாடக சபா மானேஜர் மதுரநாயகம் அவர்களுக்குச் சமர்ப்பணம்' என்று அச்சிடப்பட்டிருந்தது.

இதைக் கண்டதும் மதுரநாயகம், "ஆ! என் ரமணியல்லவா இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறான்!" என்று கூறிக் கொண்டே தம் இடத்தைவிட்டு எழுந்தார். துள்ளிக் குதித்துக்கொண்டே முதலாளி மோகனரங்கத்திடம் ஓடினார். அந்தப் புத்தகத்தைக் காட்டி விஷயத்தைக் கூறினார். அவருக்கும் ஒரே ஆனந்தம்! உடனே அவர், "மதுரநாயகம்! ரமணியின் விலாசம் இதில் இல்லையே! ஆனாலும் பரவாயில்லை. இதில் பதிப்பகத்தின் விலாசம் இருக்கிறது. உடனே அந்த விலாசத்துக்கு ஒரு தந்தி கொடுப்போம். ரமணியை எப்படியாவது விரைவில் இங்கு வரவழைக்க வேண்டும்" என்றார்.

அன்றே தந்தி கொடுத்தார்கள். ரமணியும் பதில் தந்தி கொடுத்து, ஒரு நீண்ட கடிதமும் எழுதி அனுப்பினான். அந்தக் கடிதத்தில், நடந்தவற்றையெல்லாம் விவரமாக எழுதி விட்டு, "தந்தியில் கண்டபடி உடனே புறப்பட்டு வர வேண்டும்; உங்களையெல்லாம் காண வேண்டும் என்றுதான் என் மனம் துடிதுடிக்கிறது. ஆனாலும், இங்குள்ளவர்களுக்கு இப்போது என்னைத் தனியாக அனுப்ப மனமில்லை. அத்துடன், என் கதையைக் கேட்க வரும் குழந்தைகளும் என்னைக் காணாமல் ஏங்கிப்போவார்கள். ஆனாலும், இதற்கு ஒரு நல்ல வழி இருக்கிறது. பர்மாவில் தமிழ் நாடகம் நடப்பதே அபூர்வம். அதிலும் குழந்தைகளே நடிக்கும் நாடகத்துக்கு அபாரமான வரவேற்பு இருக்கும். ஆகையால், என் வளர்ப்புத் தந்தையும் என் சிநேகிதன் சுந்தரத்தின் தந்தையும் சேர்ந்து நீங்கள் இங்கு வந்து சில நாடகங்களை நடிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். எல்லாச் செலவையும் அவர்கள் இருவருமே ஏற்றுக் கொள்வார்கள். அவசியம் நீங்கள் இங்கு வர வேண்டும். நீங்கள் இங்கு வந்தால் ஒருவரை ஒருவர் சந்திக்க வழியுண்டு. அத்துடன் இங்குள்ள தமிழ்நாட்டுக்

குழந்தைகளும், பெரியவர்களும் நம் சபா நாடகங்களைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைவார்கள். எங்களது வேண்டுகோளைத் தயவுசெய்து ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று எழுதினான்.

முதலாளி மோகனரங்கத்துக்கு வெகு நாட்களாகவே ஓர் ஆசை உண்டு. கடல் கடந்து சென்று நாடகங்கள் நடத்திக் காட்டவேண்டும் என்பதுதான் அந்த ஆசை. ரமணியின் கடிதத்தைக் கண்டதும் மோகனரங்கத்துக்கு அளவில்லாத ஆனந்தம். உடனேயே பர்மா புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்யும்படி சொன்னார்.

பாஸ்போர்ட் எடுப்பதற்கும், மற்ற ஏற்பாடுகளைச் செய்வதற்கும் சரியாக இரண்டு மாதங்களாயின. மூன்றாவது மாத ஆரம்பத்தில் சபா பர்மாவுக்குப் புறப்பட்டது.

ஸ்ரீ முருகன் பால நாடக சபாவிலுள்ள சிறுவர்களுக்கு ஒரே ஆனந்தம். கடல் கடந்து அன்னிய நாடான பர்மா தேசத்துக்குத் தாங்கள் போகப் போகிறோம் என்பதில் அவர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஏன், மானேஜர் மதுரநாயகத்துக்கே அது புதிய அநுபவமாய்த்தான் இருந்தது.

பர்மா வந்ததும் மதுரநாயகம் முதல் காரியமாக ரமணியைப் பார்க்கத்தான் விரும்பினார். ஆம்! நெடுநாட்களாகப் பிரிந்திருந்ததால் அவனைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் அவருக்கு அதிகமாயிற்று.

பர்மாவில் ரமணியைக் கண்டதும் மதுரநாயகம், அப்படியே அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார். அப்போது மோகனரங்கமும் மற்றவர்களும் அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை. பிரிந்தவர் கூடும்போது ஆனந்தத்துக்குக் கேட்க வேண்டுமா?

மாந்தலே நகரில் முதன் முதலாக அவர்கள் நடத்திய நாடகம் 'கோமாளிக் குப்பன்' என்பதுதான்! ஆம், ரமணி எழுதிய கதையைத்தான் அவர்கள் நாடகமாக்கியிருந்தார்கள். இடையிலே இருந்த இரண்டு மாத காலத்தில் அந்த நாடகத்தை அவர்கள் தயாரித்து விட்டார்கள்.

முதல் நாள் நடந்த நாடகத்துக்குக் கட்டணம் எதுவும் கிடையாது. ஆனால், பதினொன்று வயதுக்கு உட்பட்ட குழந்தைகளே அனுமதிக்கப் பட்டார்கள். மாந்தலே நகரிலுள்ள எல்லாக் குழந்தைகளும் – பர்மியக் குழந்தைகள் உள்பட – கும்பல் கும்பலாக வந்து 'கோமாளிக் குப்பன்' நாடகத்தைக் குதூகலத்துடன் பார்த்தார்கள். அடிக்கடி கை தட்டி ஆனந்தத்தை வெளிப்படுத்தினார்கள். 'ஆஹா! அற்புதம்! அபாரம்!' என்று வாய் விட்டுப் புகழ்ந்தார்கள்.

நாடகத்தை எழுதிய ரமணிக்கு மாலை போட்டு மரியாதை செய்யும்போது, 'பர்மா ரமணி வாழ்க! பர்மா ரமணி வாழ்க!' என்று அந்தக் கொட்டகையே அதிரும்படி குழந்தைகள் எல்லோரும் கோஷமிட்டார்கள். அவர்களுடன் சேர்ந்து நாமும், "பர்மா ரமணி வாழ்க! நீடூழி வாழ்க!" என்று ரமணியை வாழ்த்துவோமாக!

(முற்றும்)





"ஐயா எங்கே அப்பா!"

"அதானுங்க! காலமே சலூனுக்குத் தலை வெட்டிக்கப் போனாரு. அப்புறம் திரும்பி வரவே இல்லீங்க!"

* * *

"அதிகப்படி இட்லி சாப்பிடும் போட்டியில் நீ ஜெயித்ததற்கு உனக்கு வெள்ளிக் கப்பு பரிசு கொடுத்தார்களாமே! ரொம்ப சந்தோஷம்!"

"கப்பு கொடுத்ததில் என்னங்க சந்தோஷம். இன்னும் பத்து இட்லி கொடுத்திருந்தாலும் சந்தோஷப்படலாம்!"



* * *



எருமை: நாம் மட்டும் பால் கறக்காத மிருகமாக இருந்தால் நம்ப இருக்கிற லக்ஷணத்துக்கு நம்மை ஊருக்குள்ளேயே விடமாட்டார்கள். மிருகக் காட்சி சாலையில்தான் இருப்போம்!

ருஷ்ய நாட்டு நாடோடிக்கதை

# இளவரசி மரியா

4

கிழவி பாபாயாகா காற்றைவிட வேகமாகச் சென்றான். நேரே தவளையிருக்கும் குட்டையை அடைந்தான்.

"ஓ! தவளையம்மா சௌக்கியமாய் இருக்கிறாயா?" என்று கேட்டான் கிழவி.

"சௌக்கியமாய்த்தான் இருக்கிறேன்" என்றது தவளை.

"அப்படியானால் கொஞ்சம் உன் சேற்றுக் குட்டையை விட்டு வெளியே வாயேன்" என்றான் பாபாயாகா.

கிழத் தவளையும் பாபாயாகாவும் நெருங்கிய நண்பர்கள். அதனால் கிழவியின் வேண்டுகோளைத் தவளையினால் மறுக்க முடியவில்லை. சேற்றுக் குட்டையை விட்டு ஒரு தாவுத்தாவி வெளியே வந்து விழுந்தது.

"தவளையே! 'எங்கிருப்பது என்பதும் தெரியாது, என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைப் பற்றி உனக்குத் தெரியுமா?" என்றான் பாபாயாகா.

"எனக்குத் தெரியும்!" என்றது தவளை.

"அப்படியானால் தயவு செய்து அது எங்கிருக்கிறது என்று சொல்லேன். அதைத் தேடிக் கண்டு பிடிக்கும் வேலையில் என் மாப்பிள்ளை இறங்கியிருக்கிறார்! அவருக்கு நான் உதவ வேண்டுமே!" என்று சொன்னான் பாபாயாகா.

"அது இருப்பது ரொம்பத் தூரத்தில் ஆயிற்றே! அவ்வளவு தூரத்துக்கு என்னால் இப்பொழுது தாவ முடியாதே! ஆனால் நான் ஒரு யுக்தி சொல்லுகிறேன். ஒரு ஜாடி நிறையப் புதுப் பாலை விட்டு அதில் என்னைப் போட்டு அந்த ஜாடியை உன் மாப்பிள்ளையிடம் கொடுத்து எடுத்துக் கொள்ளச் சொல். அவரை நெருப்பு நதி வரை போகச் சொல். அங்கே போனதும் அதற்கு மேலே போக வேண்டிய வழியையும் காரியத்தையும் நான் அவருக்குச் சொல்லுகிறேன்" என்றது.

உடனே பாபாயாகா கிழத் தவளையை எடுத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். ஒரு ஜாடியை எடுத்தான். அதில் பாலை ஊற்றித் தவளையை விட்டான். மறுநாள் விடியற்காலை ஆண்டிரியை எழுப்பினான்:

"மாப்பிள்ளை! எழுந்திருங்கள்! உடைகளை அணிந்து கொள்ளுங்கள். இதோ தவளையிருக்கிற ஜாடி. இதை எடுத்துக் கொள்ளுங்கள். என்



குதிரைமீது ஏறிக்கொண்டு அக்னி ஆற்றுக்குப் போங்கள். அங்கு குதிரையை விட்டுவிட்டு ஜாடிக்குள்ளிருந்து தவளையை எடுங்கள். தவளை மேற்கொண்டு நீங்களெப்படிப் போக வேண்டும், என்ன செய்ய வேண்டும் என்பதைக் கூறும்'' என்றான் பாபாயாகா.

ஆண்டிரி, கிழவி சொன்னபடி தன் உடுப்பை எடுத்து அணிந்து கொண்டான். ஜாடியை எடுத்துக் கொண்டான். பாபாயாகாவின் குதிரை மீது ஏறிக் கொண்டான். சவாரி செய்தான். எத்தனை நாள் சவாரி செய்தான் என்று யாரால் விவரித்துச் சொல்ல முடியும்?

எப்படியோ பல நாட்கள் சவாரி செய்து அக்னியாற்றை அடைந்தான். அந்த ஆற்றை எந்தப்பிராணியினாலும் தாவிக் குதித்துக் கடந்துவிட முடியாது! எந்தப் பறவையும் பறந்து சென்று கடந்துவிட முடியாது!

ஆண்டிரி குதிரையை விட்டுக் கீழே இறங்கினான். அப்போது ஜாடிக்குள்ளிருந்த தவளை, "இளைஞனே! என்னை வெளியே எடு. நாம் இந்த ஆற்றைக் கடந்தாக வேண்டும்!'' என்றது.

ஆண்டிரி, ஜாடியிலிருந்த தவளையை எடுத்துத் தரையில் விட்டான்.

உடனே தவளை, "சரி, இப்போது நீ என் முதுகின் மீது ஏறிக் கொள்!'' என்றது.

"தவளையம்மா! நீ ரொம்பச் சிறிதாக இருக்கிறாயே! உன் மீது நான் உட்கார்ந்தால் நீ நசுங்கிப் போய் விடுவாயே!'' என்றான் ஆண்டிரி.



"அப்படி 'வெல்லாம் பயப்படாதே! சும்மா உட்கார்! உட்கார்ந்து என்னைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்!" என்று கூறியது தவளை.

ஆண்டிரி வேறு வழியின்றிக் கிழத்தவளையின் மீது உட்கார்ந்தான். அவ்வளவு தான்! தவளை கொஞ்சம் கொஞ்சமாக ஊதத் தொடங்கியது. இப்படி ஊதி ஊதிப் பெரிய வைக்கோற்போர் போன்றதோர் உருவத்தை யடைந்தது.

இப்போது தவளை ஆண்டிரியை, "தம்பி, நீ என்னை இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டது.

"ஆமாம், தாயே!" என்றான் ஆண்டிரி.

மீண்டும் தவளை பருக்க ஆரம்பித்தது. முன்னைவிடப் பெரிய வைக்கோற் போரின் உருவத்தைப் பெற்றது.

"தம்பி, என்னைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாயா?"

"ஆமாம், தாயே!" என்றான் ஆண்டிரி.

அதைக் கேட்டுத் திருப்தியடைந்த தவளை மீண்டும் பருக்கத் தொடங்கியது. பெரிய கானகத்தைப் போன்றதோர் உருவத்தைப் பெற்றது. பிறகு ஒரு தாவுத் தாவியது. அவ்வளவுதான். அக்னியாற்றைக் கடந்து

மறு பக்கம் வந்து விழுந்து விட்டது. இக் கரை அடைந்ததும், ஆண்டிரியை இறக்கி விட்டு மீண்டும் தன் பழைய சிறிய உருவத்தை எடுத்துக் கொண்டு விட்டது.

"தம்பி, அதோ தெரிகிறதே, ஒரு பாதை! அந்தப் பாதை வழியாகவே, போ! அங்கு ஒரு கோபுரம் மாதிரி தெரியும், அது கோபுரம் அல்ல; குடிசை மாதிரி தோன்றும், அது குடிசையுமல்ல; களஞ்சியம் மாதிரி காணப்படும்; களஞ்சியமுமல்ல. ஆனால் இவை யெல்லாவற்றின் இயல்புகளையும் கொஞ்சம் கொஞ்சம் பெற்றிருக்கும் ஓர் இடம். அதற்குள் தைரியமாக நுழை. அங்கே ஒரு அடுப்பிருக்கும். அதன் பக்கத்தில் நின்றுகொள். அங்கே 'நான் என்ன வென்பது தெரியாது' என்பதைக் காண்பாய்!" என்றது தவளை.

ஆண்டிரி, தவளை சொன்ன பாதையின் வழியாகவே நடந்து சென்றான். அங்கே குடிசையைப் பார்த்தான். அடுத்த கணம் அது குடிசையாகத் தோன்றவில்லை. அதற்கு வாசலோ, ஜன்னலோ ஒன்றும் இருக்க வில்லை. சாதாரண ஒரு பிரம்புத் தட்டி சுற்றிய அடைப்பாகத் தான் இருந்தது. அதற்குள் ஆண்டிரி நுழைந்தான். ஒரு தணல் எரியும் அடுப்பிருந்தது. அதன்

---

பக்கத்தில் போய் நின்று ஒளிந்து கொண்டான் ஆண்டிரி.

சற்று நேரத்தில் சட சடவென்று பலத்த சத்தம் கேட்டது. இதற்குக் காரணம் என்னவென்று பார்த்தபோது ஒரு ராக்ஷஸன் என்பது தெரிந்தது. அவன் தான் அப்படிக் காட்டு மரங்களை முறித்து உடைத்துத் தள்ளிக் கொண்டு வந்து கொண்டிருந்தான்.

இந்த ராக்ஷஸன் அந்தக் குடிசையில் வசிப்பவன். அவன் அக்குடிசைக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக, "தம்பி கோம்! எனக்கு ரொம்பவும் பசிக்கிறது. ஏதாகிலும் சாப்பிடக் கொண்டுவா!" என்று கட்டளையிட்டான்.

அவ்வளவுதான்; எங்கிருந்தோ ஒரு மேஜை வந்தது. அந்த மேஜையில் வகை வகையான இனிய தின்பண்டங்களும் பானங்களும் இருந்தன. ராக்ஷஸனுக்கிருந்த பசியில் வெகு வேகமாகச் சாப்பிட்டான். ஒரு மாதிரி வயிறு நிரம்பியதும், "தம்பி கோம்! இந்த மிச்சம் மீதியெல்லாம் எடுத்துக் கொண்டு போய் இந்த இடத்தைச் சுத்தம் செய்!" என்று கட்டளையிட்டான்.

உடனே, மேஜை மாயமாய் மறைந்து விட்டது. அத்துடன் அங்கு சற்று முன் யாரோ சாப்பிட்டிருக்கிறார்கள் என்பதற்கான அறிகுறிகூட இல்லாமல் இடம் சுத்தமாகிவிட்டது.

இதையெல்லாம் மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த ஆண்டிரிக்கு ஒரே வியப்பாக இருந்தது. ஆம், ஒரு ஆளோ, மற்றபடி யந்திரமோ ஒன்றும் காணாமல் சொன்ன காரியங்கள் மட்டும் நடைபெறுகின்றன என்றால் ஆண்டிரிக்கு வியப்பாக இருக்கத்தானே செய்யும்?



ஆண்டிரியின் வியப்பு தீரவில்லை. அதற்குள் அங்கு சாப்பிட்டுக்கொண்டிருந்த ராக்ஷஸன் மீண்டும் வெளியே போய் விட்டான்!

ஆண்டிரிக்குச் சற்றுத் தைரியம் வந்தது. அவன் தன் மறைவிடத்தை விட்டு வெளியே வந்தான். அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. 'அந்த ராக்ஷஸன் ஏதோ பெயரைச் சொல்லிக் கூப்பிட்டானே, நாமும் அப்படிக் கூப்பிட்டுச் சாப்பாடு கொண்டுவரச் சொன்னால் என்ன? என்ன ஆகிறது என்றுதான் பார்ப்போமே!' என்று எண்ணினான். மனசில் ஒரு பக்கம் துணிச்சல் இருந்தாலும் இன்னொரு பக்கம் பயம். அந்த பயத்தில் இதயம் 'திக் திக்' என்று அடித்துக் கொள்ள, "தம்பி கோம்! சாப்பிட ஏதாகிலும் கொண்டு வா!" என்று கூறி விட்டான்.

என்ன ஆச்சரியம்! அவன் கூறிய மொழிகள் அவன் வாயினின்று வெளி வரும் முன்பே வகை வகையான தின்பண்டங்கள் நிரம்பிய மேஜை அவன் முன் தோன்றியது.

ஆண்டிரிக்கு ஒரே சந்தோஷமும் நன்றி புணர்ச்சியும் உள்ளத்தில் பொங்கின. சாப்பிடுவதற்கு அந்த மேஜையின் முன் உட்கார்ந்து கொண்டே, "தம்பி கோம்! நீயும் என் பக்கத்தில் வந்து உட்காரேன். இருவருமாகச் சாப்பிடுவோம்!" என்றான்.

இதற்கு அந்த அருவத்திடமிருந்து தான் எத்தகைய பதில் வந்தது!

"உங்கள் அழைப்புக்கு மிக்க நன்றி! நானும் எத்தனையோ ஆண்டுகளாக உணவு பரிமாறி வருகிறேன். ஆனால் எனக்கு ஒரு கருகிப் போன ரொட்டித் துண்டைக் கூட இதுவரை யாரும் கொடுத்தது கிடையாது. ஆனால் நீங்களோ என்னை உங்கள் பக்கத்தில் உட்கார வைத்துக் கொள்கிறீர்கள். சாப்பிடச் சொல்லுகிறீர்கள்!" என்று பதில் வந்தது.

அடுத்தகணம் மேஜையின் மீது இருந்த பண்டம் ஒவ்வொன்றாக மறையத் தொடங்கியது. பானங்கள் கடகட என்று கண்ணாடி தம்ளர்களில் தாமாகவே கொட்டிக் கொண்டன! உருவம் என்று ஒன்றும் கண்ணுக்குப் புலனாகவில்லை. எனினும் மனிதன் சாப்பிடும்போது செய்யும் அத்தனை காரியங்கள் மட்டும் நிகழ்வதைப் பார்த்து ஆண்டிரி வாயடைத்துப் போனான்!

இப்படி அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது ஆண்டிரி, "தம்பி, கோம்! நான் உன்னை என் கண்களால் பார்க்க வேண்டுமே!" என்றான்.

"அது தான் முடியாது. ஏனெனில் நான் தான் 'எங்கிருப்பவன் என்பதும் தெரியாது; என்ன பொருள் என்றும் தெரியாது!'" என்று பதில் வந்தது.

"அப்படியா! ரொம்ப சந்தோஷம். தம்பி கோம்! உனக்கு என்னிடம் வேலை செய்வதில் விருப்ப முண்டா?" என்று பரிவோடு கேட்டான் ஆண்டிரி.

"பேஷாக! நல்லவர் என்று உலகில் யாராகிலும் உண்டு என்றால் நீங்கள் தானே அவர்? உங்களிடம் வேலை செய்வதில் எனக்கு எவ்வளவோ விருப்ப முண்டு!" என்றான்.

# திருட இயலாத குடும்ப சைஸ் பாக்கில்

# 'அனஸின்'

## வாங்குங்கள்

'அனஸின்' 32 வில்லைகள் கொண்ட டப்பா ஒவ்வொரு முறையும் நீங்கள் வாங்கும்பொழுது 4 அணாக்கள் மிச்சமாகின்றன. அனஸினை எப்பொழுதும் கையோடு வைத்துக்கொள்ளும் குடும்பங்களுக்காகவே இந்த டப்பாவை பிரத்தியேகமான முறையில் அமைத்திருக்கிறோம். அனஸினை அவர்கள் சதா வைத்திருப்பதற்கு காரணம் அதில் வலி நிவாரணத்தை விரைவில் அளிக்கும் 4 மருந்துகள் அடங்கியிருப்பதே:

1. **கொயினா:** ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. **காப்பின்:** பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. **பினாஸிடின்:** ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. **ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்:** தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினில் அடங்கியிருக்கும் இந்த நான்கு மருந்துகள் நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து, பத்திரமாகவும், நிச்சயமாய், விரைவில் நிவாரணமும், தலைவலி, ஜுரம், ஜலதோஷம், பல்வலி மற்றும் தசை நார்களில் நோவு முதலியவற்றை போக்குகின்றது.




'அனஸின்' 2 வில்லைகள் கொண்ட பாக்கெட்டுகளிலும் கிடைக்கும்.

**எப்பொழுதும் அனஸின் வில்லைகள் வேண்டுமென்றே கேளுங்கள்**

சாப்பாடெல்லாம் முடிந்ததும் ஆண்டிரி "இந்த மேஜையை யெல்லாம் துடைத்து எடுத்து வைத்து விட்டு என்னுடன் வா! போகலாம்" என்றான்.

ஆண்டிரி குடிசையை விட்டு வெளியே வந்தான். சுற்று முற்றும் பார்த்தான்.

"என்னோடு இருக்கிறாயா, தம்பி நோம்?" என்று கேட்டான் ஆண்டிரி.

"உங்களோடுதான் இருக்கிறேன்! இனி உங்களை விட்டு எங்கும் போக மாட்டேன்!" என்றான் நோம்.

ஆண்டிரி வேகமாக நடந்து அக்னி யாற்றை யடைந்தான். அங்கு தவளை அவன் வரவை எதிர் நோக்கி உட்கார்ந்திருந்தது. ஆண்டிரியைக் கண்டதும், "தம்பி! நீ தேடி வந்த பொருள் கிடைத்து விட்டதா?" என்று கேட்டது.

"கிடைத்து விட்டது தாயே!" என்றான் ஆண்டிரி.

"அப்படியானால் முதுகின் மீது ஏறிக்கொள்."



ஆண்டிரி அதன் முதுகின்மீது ஏறிக் கொண்டான். தவளை பழையபடி தனது உருவத்தைப் பெரிதாக்கிக் கொண்டது. ஒரு தாவுத் தாவியது. அவ்வளவுதான். அக்னி சுவாலை வீசும் ஆற்றின் எதிர்க் கரையை அடைந்து விட்டது!

ஆண்டிரி தவளையின் முதுகை விட்டு இறங்கினான். அதனிடம் தன் நன்றியைத் தெரிவித்து விட்டு விடை பெற்றுக் கொண்டான்.

இனி ஆண்டிரி தன் நாட்டுக்குச் செல்ல வேண்டியதுதான். எனவே, தன் நாட்டை நோக்கி நடக்கலானான்! நடந்து கொண்டிருக்கும் போதே அவனுக்குச் சந்தேகம் வந்து விடும். உடனே அந்த இடத்தில் நின்று ஒரு முறை திரும்பி, "தம்பி நோம்! நீ என்னுடன் வந்து கொண்டிருக்கிறாயா?" என்று கேட்பான்.

"ஓ! உங்களுடன்தான் வருகிறேன். பயப்படாதீர்கள்! உங்களை விட்டு ஒரு கணம் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் அசைய மாட்டேன்!" என்பான்.

இப்படி அவன் கேட்டுக் கொண்டே நடந்தான். எத்தனையோ நாட்கள் நடந்தான். நடந்து நடந்து அவன் கால்கள் புண்ணாகி விட்டன. உடல் களைத்து விட்டது. "தம்பி, நோம்! எவ்வளவு களைப்பாக இருக்கிறது தெரியுமா?" என்றான் ஆண்டிரி.

"முதலிலேயே வீட்டுக்குப் போக வேண்டும் என்று என்னிடம் சொல்லியிருக்கக் கூடாதா! ஒரு நொடியில் வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்திருப்பேனே!" என்றான் தம்பி நோம்.

இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே எங்கிருந்தோ பயங்கரக் காற்று வந்தது. அந்தக் காற்று ஆண்டிரியை அப்படியே தூக்கிக் கொண்டது. பெரிய மலைகளையும், காடுகளையும், நாடுகளையும், நகரங்களையும் காற்றில் மிதந்து கடந்து சென்று கொண்டிருந்தான் ஆண்டிரி!

இப்படிப் போய்க் கொண்டிருந்த போது வழியில் பெருங் கடல் தட்டுப் பட்டது. கீழே நீல அலைகள் எழுந்து மோதிக் கும்மாளம் போட்டுக் கொண்டிருந்தன. ஆண்டிரிக்கு அதைப் பார்த்ததும் ஒரே பயமாகப் போய்விட்டது!

"தம்பி, நோம்! நான் சற்று ஓய்வெடுத்துக் கொண்டால் தேவலையே!" என்றான்.

காற்றின் வேகம் அந்தக் கணமே குறைந்தது. ஆண்டிரி கடலுக்குள் விழ ஆரம்பித்தான். ஆனால் விழவில்லை. நீல அலைகள் மோதிக் கொண்டிருந்த இடத்தில் ஒரு தீவு தோன்றியது. அந்தத் தீவில் தங்க ஓடுகள் வேய்ந்த அரமனை எழுந்தது. அதைச் சுற்றி அழகிய நந்தவனம் காட்சியளித்தது. இப்போது தம்பி நோம், ஆண்டிரியிடம் கூறினான்.

"இங்கே தங்கி, சாப்பிட்டுச் சற்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் கூடவே கடலின் மீது ஒரு கண் வைத்துக் கொள்ளுங்கள். மூன்று வியாபாரக் கப்பல்கள் மிதந்து வரும். அந்தக் கப்பல்களில் வரும் வியாபாரிகளை வரவேற்று உபசரியுங்கள். அவர்களுக்கு வயிறு நிறையச் சாப்பாடு பண்ணி வையுங்கள். அவர்கள் மூன்று அதிசயப் பொருள்கள் வைத்திருப்பார்கள். அந்த மூன்று அதிசயப் பொருள்களையும் என்னை அவர்களிடம் கொடுத்து மாற்றிக் கொள்ளுங்கள். பயப்படாதீர்கள். நான் உங்களை விட்டு எங்கும் போய்விட மாட்டேன். அவர்களுடன் போவது போல் போய் விட்டு, மீண்டும் உங்களிடமே வந்து விடுவேன்!" என்றான் நோம்.

இப்படிச் சொல்லி எத்தனையோ நாட்களான பிறகு மேற்குத் திசையிலிருந்து மூன்று கப்பல்கள் வந்தன. அந்தக் கப்பல்களில் வந்த வியாபாரிகள் அந்தத் தீவைப் பார்த்தார்கள். பொன் மாளிகையைப் பார்த்தார்கள். அதைச் சுற்றியுள்ள அழகிய தோட்டத்தைப் பார்த்தார்கள். அப்படியே திகைத்து நின்றார்கள்!

(அடுத்த இதழில் முடியும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10   Editor : Mi. Pa. Somasundaram

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

